ஆகும் சக்தியை ராஜூ எவ்வாறு பெற்றான் என்பதைப் படியுங்கள்

# கேமல் சேம்ப்

அன்பார்ந்த நண்பர்களே,

இன்று பள்ளிக்கூடத்தில் ஒரு ஜோக் செய்தேன். கேமல் ஆயில் பேஸ்டல் உபயோகித்து ஒரு அழகான பட்டுப்பூச்சியைப்போல் வண்ணம் தீட்டி கரும்பலகையில் ஒட்டி வைத்தேன். பார்ப்பதற்கு இது மிக அழகாக இருந்தது.



வண்ண ஜாலத்துடன் இயறகையாக இருந்தது. ஒவ்வொருவரும் ஏமாந்து போனார்கள். அவர்கள் அதை நிஜமானப் பட்டுப்பூச்சி என்று நினைத்தார்கள். அது மட்டுமல்ல, இரண்டு பட்டுப் பூச்சிகளும் அதைச் சுற்றி வட்டம் வந்தன, அதனுடன் சிநேகம் செய்து கொள்ள. என்ன வேடிக்கை! நான் உண்மையில் ஒரு கேமல் சேம்ப். எவ்வாறெனில் உண்மையான பட்டுப்பூச்சிகளையும் நான் கேமல் ஆயில் பேஸ்டல் கொண்டு ஏமாற்ற முடியும்.










உன் அன்புள்ள,

ராஜூ





## கேமல்

**வெற்றி வண்ணங்களை உபயோகியுங்கள். கேமல் சேம்ப்பாகத் திகழுங்கள்.**

INTERACT VISION CL/94/3/TAM

# இதை மிஞ்ச முடியுமா!




புதிய

PARLE

**big chief**

பழங்களின் சுவை கொண்ட டாஃபி

வாழைப்பழம் ♦ மேங்கோ ♦ ஆரஞ்சு

everest/94/PP/72-lm-R

# மங்கை

நவம்பர் '94

## தீபாவளி மலர்

* செய்யும் தொழிலே தீபாவளி -*சிறப்புப் பேட்டி*
* அந்தக் கால தீபாவளி இந்தக் கால தீபாவளி -*கலந்துரையாடல்*
* காளி *(சிறுகதை)* -*திலகவதி*
* தானம் -*விமலா ரமணி*
* சின்னவள் (குறுநாவல்) -*அனுராதா ரமணன்*
* எனது கதைகளில்... -*இந்துமதி*
* அன்பான கணவர் - *பூர்ணிமா பாக்யராஜ்*
* நம்பிக்கை தீபம் -*அன்பு நெஞ்சன்*

பெண்களுக்கு வரும் நோய்களுக்கு சித்த மருத்துவம்

ருசிக்க மணக்க தீபாவளி சமையல்

பெண்களும் சினிமாவும்

1995 தீபாவளி வரை உங்கள் ராசிபலன்.

இத்துடன் இணைப்புப் பிரதியாக

## ஆலய மலர்.

(ஸ்தல வரலாறு மற்றும் சில்பிமின் வண்ணப் படங்களுடன்)

ஒரே சமயத்தில் இரு மலர்கள் விலை ரூ.25/-




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி

## வரலாற்றைப் படிக்கவும்

வரலாறு உலகின் கடந்த கால நிகழ்ச்சிகளைக் கூறுவது. இந்நிகழ்ச்சிகளை உருவாக்கியவர்களின் வாழ்க்கையை அறிவிக்கிறது. எனவே வரலாறு நாடுகளுக்கு உயிர்நாடி. குழந்தைகளின் கல்வித் திட்டத்தில் அவசியம் இடம் பெறவேண்டிய விஷயம்.

ஆனால் இப்போது மாணவர்கள் நம் நாட்டின் உயர் பண்பையும் வரலாற்றையும் அறியாமல் இருக்கிறார்கள். இது வருந்தத்தக்க விஷயம். அவர்கள் பாட புத்தகங்களிலுள்ள ஒருசில பகுதிகளை மட்டும் உருப் போடுகிறார்கள். இவை ஒரு சில மாவீரர்களையும், மன்னர்களையும், போர்களையும் பற்றியதாகவே உள்ளன.



வரலாறு நம் ஒரு நாட்டினுடையது மட்டுமல்ல மற்றும் பல நாடுகளுடையதும் ஆகும். படிக்க வேண்டியதும் மிக அவசியம். இதற்கான வழிமுறைகள் பாடத் திட்டத்தில் சேர்க்கப்பட வேண்டும்.

ஒவ்வொரு வகுப்பிலும் நம் நாட்டின் வரலாற்றோடு இன்னொரு நாட்டின் வரலாற்றையும் கற்பிப்பது சிறந்தது. இதனால் ஐந்தாவது வகுப்பிலிருந்து பத்தாவது வகுப்பிற்குள் ஆறு பிற நாடுகளின் வரலாற்றை தன் நாட்டின் வரலாற்றுடன் அறிந்து கொள்ள முடியும்.

நல்ல முறையான கல்வித் திட்டம் இன்று தேவையே!



மதிமுகம் : 95 நவம்பர் 1994 புன்னகை : 5

தனிப்பிரதி : ரூ. 5.00 வருட சந்தா : ரூ. 60.00



Sunday, Piano, Nursery Rhymes
It's Morton for me all the time



MORTON
SWEETS

I Love my Sundays ..... Nursery Rhymes and my Mummy close to me and Mortons
all the time. It has been our Family's favourite for years and years.
Delicious and yummy in so many flavours. All with the goodness of
Creamy Milk, Glucose and Sugar.
Chocolate and Coconut Cookies, Rose Eclairs, Supreme
Chocolate and Coconut Toffees, Lacto Bonbons Mango King
and so many other delicious treats.
Um m m m m Every bite a yummy delight.

A lifetime of real goodness

**MORTON CONFECTIONERY & MILK PRODUCTS FACTORY**
P.O. : Marhowrah 841 418 Dist. : Saran, Bihar

**Caution Notice :**
MORTON and its wrappers are registered trade mark of Upper Ganges Sugar Industries Ltd. Any infringement of trade mark rights is liable to prosecution.

## செய்திகளும் தகவல்களும் :

# ஸ்ரீலங்காவில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள்



ஸ்ரீலங்காவின் முன்னாள் பிரதமர் திருமதி பண்டாரநாயகேயின் புதல்வி திருமதி சந்திரிகா குமாரதுங்கா தற்போது ஸ்ரீலங்காவின் பிரதமராகப் பதவி ஏற்றிருக்கிறார். அந்நாட்டின் பிரதமராகப் பதவி ஏற்ற இரண்டாவது பெண்மணி இவர்.

பிரதமராக இருந்த திரு எஸ். டபிள்யு. ஆர்.டி. பண்டாரநாயகே 1959–ல் கொலை செய்யப்பட்டார். அவருக்குப் பின் அவரது மனைவி திரும்தி சிரிமாவோ பண்டாரநாயகே 1960–ல் பிரதமராகி உலகிலேயே பிரதமர் பதவி வகித்த முதல் பெண்மணி என்ற பெயர் பெற்றார். அவர் 1960லிருந்து 1977 வரை தொடர்ந்து அப்பதவியில் இருந்தார். 1978–ல் நடந்த தேர்தலில் அவரது தலைமையிலிருந்த ஸ்ரீலங்கா விடுதலைக் கட்சி திரு. ஜே.ஆர். ஜெயவர்த்தனே தலைமையில் அமைந்த ஐக்கிய தேசியக் கட்சியிடம் தோற்றுப் போனது.

ஐக்கிய தேசியக் கட்சி 17 ஆண்டுகள் ஆட்சியில் இருந்த பின் கடந்த ஆகஸ்டில் நடந்த தேர்தலில் தோற்றது. அதனை எதிர்த்த மக்கள் கூட்டணி பாதிக்கு மேல் ஓரிரு இடங்களைப் பெற்றது. இக்கூட்டணியில் ஸ்ரீலங்கா விடுதலைக் கட்சி முக்கிய அங்கம் வகித்தது. ஐக்கிய தேசிய கட்சிக்குப் பெரும்பான்மை இல்லாததால் ஸ்ரீலங்கா விடுதலைக் கட்சி மற்ற கட்சிகளின் உதவியோடு திருமதி சந்திரிகா குமாரதுங்காவின் தலைமையில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. ஆகஸ்ட் 19–ல் 21 அமைச்சர்களடங்கிய மந்திரி சபையை திருமதி சந்திரிகா அமைத்துப் பிரதமரானார்.

இந்தியாவின் தென்முனையை ஒட்டி அமைந்த தீவுதான் ஸ்ரீலங்கா எனப்படும் நாடு. இராமாயணத்தில் கூறப்பட்ட இலங்கை இதுவே. அசோக சக்கரவர்த்தி இலங்கைக்குத் தம் மகளை புத்தமதப் பிரசாரத்திற்கு அனுப்பியது

யாவருக்கும் தெரிந்ததே. கண்டியில் புத்தரது பல் 2000 ஆண்டுகளாக ஆலயத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

இலங்கையை 16-வது நூற்றாண்டில் போர்த்துகீசியர் ஆக்கிரமித்தனர். 17-வது நூற்றாண்டில் டச்சுக்காரர் கைக்கு அது மாறியது. 18-வது நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிரிட்டிஷார் இலங்கையைக் கைப்பற்றினர். 1948-ல் சுதந்திர நாடாகி பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் இருந்தது. 1977-ல் அது தன்னை சோஷலிசக் குடியரசு நாடாகப் பிரகடனம் செய்தது. அதுவரை அதற்கு இருந்த பெயரான 'சிலோன்' என்பது ஸ்ரீலங்கா என மாற்றப்பட்டது. 1977-ல் புதிய அரசியல் சட்ட அமைப்பின்படி திரு. ஜெயவர்த்தனே குடியரசுத் தலைவரானார்.

1989-ல் ஐக்கிய தேசியக் கட்சியின் பலம் குறைந்தது. அதுவரை பிரதமராக இருந்த பிரேமதாசா குடியரசுத் தலைவரானார். 1993-ல் மேதினக் கொண்டாட்டத்தில் கலந்து கொண்ட பிரேமதாசா கொலை செய்யப்பட்டார். அதனால் அப்போது பிரதமராக இருந்த டி.பி. விஜயதுங்கே குடியரசுத் தலைவரானார். இவரது பதவிக்காலம் 1995 ஜனவரியோடு முடிகிறது. குடியரசுத் தலைவர் தேர்தல் இவ்வாண்டு நவம்பரில் நடைபெறும்.

ஸ்ரீலங்காவில் பெரும்பான்மையோர் பௌத்தர்களே. வடக்கு, கிழக்கு மாநிலங்களில் தமிழர்கள் பெரும்பான்மையினர். தமிழர்கள் ஸ்ரீலங்காவின் மக்கள் தொகையில் ஐந்தில் ஒரு பங்கினர். இந்த இரு இனங்களுக்கிடையே 1956 முதல் சண்டை சச்சரவுகள் ஏற்பட்டு வருகின்றன. 1983-ல் உள்நாட்டுப் போர் தீவிரமாகி இருபதாயிரம் பேர் வரை கொல்லப்பட்டார்கள்.




சந்திரிகா பண்டார நாயகே பிரான்சில் படித்துக் கொண்டிருந்தபோது திரைப்பட நடிகர் குமாரதுங்காவை விரும்பி மணந்து கொண்டார். குமாரதுங்கா ஸ்ரீலங்காவின் தமிழ்த் தலைவர்களுடன் பேசி இருதரப்பினரிடையேயும் சமாதானம் செய்து வைக்க முயன்றார். ஆனால் அவர் 1982-ல் கொலை செய்யப்பட்டார். 1990-ல் திருமதி சந்திரிகா ஸ்ரீலங்கா விடுதலைக் கட்சியில் சேர்ந்தார். 1990-ல் நடந்த மண்டலத் தேர்தலில் மேற்கு மண்டல முதலமைச்சராகத் தம் அரசியல் வாழ்க்கையை ஆரம்பித்தார்.



# குப்பைதான்!

கீதா அழகானவள். நற்குணம் படைத்தவள். அதனால்தான் அவளது சிற்றன்னை செய்யும் கொடுமைகளை எல்லாம் சகித்து வந்தாள். சிற்றன்னை சிங்காரியின் மகள் பாமா. அவள் கீதாவை வெறுத்து வந்தாள். எனவே அவள் தன் தாயிடம் கீதாவைப் பற்றி ஏதாவது கோள் சொல்லிக் கொண்டே இருந்தாள்.

கீதாவை அழகில்லாத ஏழையாக உள்ள ஒருவனைத் தேடிப் பிடித்துக் கல்யாணம் செய்து வைக்க சிங்காரி தீர்மானித்தாள். அப்படி ஒருவன் பக்கத்து ஊரில் இருப்பதாகக் கேள்விப்பட்டு அவனை வரச்சொல்லி ஒரு ஆள் வாயிலாகச் சொல்லி அனுப்பினாள். அந்த ஆள் அந்த ஊரில் அதே பெயருள்ள வேறொருவன் வீட்டிற்குப் போய் தகவலைக் கொடுத்தான். அந்த இளைஞனும் கீதாவைப் பெண் பார்க்க வந்துவிட்டான்.

வந்த வாலிபன் அழகனாயும் பணக்காரனாகவும் இருந்ததால் சிங்காரி தன் மகள் பாமாவை அவனுக்கு மணம் செய்து வைக்க முடிவு செய்தாள். அதனால் கீதாவை அவனுக்குக் காட்டாமல் தன் மகள் பாமாதான் மணப்பெண் எனக் காட்டினாள். ஆனால் அப்போது அங்கு வந்த கீதாவைப் பார்த்த அவன் தான் கீதாவையே மணக்க விரும்புவதாகக் கூறினான். இது சிங்காரிக்கு ஆத்திரத்தை மூட்டியது. அவள் ஒரு வாரத்தில் பதில் சொல்லி அனுப்புவதாகக் கூறி அந்த வாலிபனை அனுப்பி விட்டாள்.

அதற்குப் பின் சிங்காரி தன் மகளிடம் "இந்த கீதா இருக்கும் வரை உன்னைப் பெண் பார்க்க வருபவன் அவளைப் பார்த்து விட்டால் அவளைதான் மணக்க விரும்புவான்.

-சிவனார் செல்வன்-



காவல் காப்பதைக் கண்டாள். ஒரு சிறுத்தைப் புலி அவளைத் தாக்க வந்ததாயும் அதை அவன் விரட்டி விட்டு அவளுக்குக் காவலாக நின்ற தாயும் கூறவே கீதா அவனுக்குத் தன் நன்றியைக் கூறினாள்.

அவனோ "உன்னைக் கண்டதிலி ருந்து உன்னையே நான் மணந்து கொள்வது என்று தீர்மானித்து விட் டேன்" என்றான். அதுகேட்டு கீதா திகைத்துப் போனாள். சிற்றன்னை யின் கொடுமையிலிருந்து தப்பலாம் என்று ஓடி வந்தால் இங்கே இப்படி ஒரு ஆபத்தா என்று எண்ணி ஒரு நிமிடம் பேசாமல் இருந்தாள். ஆனால் சட்டென "அடடா! நான் உங் களை மணக்க முடியாதே. ஏனெனில் ஒரு ராட்சஸனை மணந்து கொள்ள வேண்டிய கட்டாயத்தின் பேரில்தான் இங்கே வந்தேன்" என்றாள்.

அதனால் அவள் அழகைக் குலைத்து விடுகிறேன்" என்று கூறினாள். அவர் கள் இருவரும் அன்றிரவு கீதாவின் முகத்தில் கொதிக்கும் எண்ணெயை ஊற்றி அவளது அழகைக் குலைத்து விடுவது என்று திட்டமிட்டனர். அவர் கள் பேசியதை மறைந்திருந்து கேட்டு விட்ட கீதா இரவில் அவர்களுக்குத் தெரியாமல் வீட்டை விட்டு வெளி யேறி அருகிலிருந்த காட்டிற்குள் வேகவேகமாக வெகுதூரம் போய் விட்டாள்.

நடந்து நடந்து களைத்துப் போன தால் அவள் ஒரு மரத்தடியே படுத்து விட்டாள். அவள் அயர்ந்து தூங்கி விட்டுக் கண்விழித்தபோது ஒரு பயங்கரப் பேர்வழி நின்று

அந்த பயங்கர மனிதனோ "யார் அந்த ராட்சஸன்? காட்டு அவனை. நான் அவனைக் கொன்றுவிட்டு உன்னை மணந்து கொள்கிறேன்" என்றான். அப்போது உண்மையி லேயே ஒரு ராட்சஸன் அவன் முன் குதித்து "நான்தான் அந்த ராட்சஸன். என்னைக் கொன்றுவிட்டா இவளை மணக்கப் போகிறாய்? பார்க்கலாம் அதை" என்றான். கீதா உண்மை யிலே ராட்சஸன் வந்தது கண்டு தன் நினைவிழந்து விழுந்து விட்டாள். பயங்கரப் பேர்வழியோ ராட்சஸ னைக் கண்டதும் தலைதெறிக்க ஓடி

விட்டான்.

ராட்சஸன் கீதாவின் மயக்கத்தைப் போக்கி "பயப்படாதே. நீ கூறியபடி ராட்சஸனான என்னை மணந்து கொள். நானும் உன்னை மிகவும் விரும்புகிறேன்" என்றான். கீதாவும் "நீயோ மலை போல இருக்கிறாய். நானோ சாதாரண மானிடப் பிறவி. நமக்கு ஜோடிப் பொருத்தமே இல்லையே" என்றாள். ராட்சஸனோ "பூ! இது ஒன்றும் கடினமல்ல. என்னால் எந்த உருவையும் எடுத்துக் கொள்ள முடியும். உனக்கேற்ற அழகிய வாலிபனாக மாறி விடுகிறேன் பார்!" எனக் கூறியதோடு மறுவினாடியே அவ்வாறு மாறியும் விட்டான்.

கீதா சற்று யோசித்தாள். இந்த ராட்சஸனை இதே உருவில் அழைத்துக் கொண்டு வீட்டிற்குப் போனால் சிற்றன்னை அவனைக் கண்டிப்பாக பாமாவுக்குத் திருமணம் செய்து வைப்பாள். அதனால் தான் ராட்சஸனிடமிருந்து தப்பி விட முடியும் என அவள் நினைத்தாள்.

கீதாவும் "ரொம்ப சரி. இனி நாம் என் வீட்டிற்குப் போய் என் தாயின் அனுமதி பெற்று கணவன் மனைவி ஆகலாம்" என்றாள். ராட்சஸனும் அதற்கு இணங்கி அவளோடு அவளது ஊருக்குச் சென்றான். கீதாவால் நடக்க முடியாது போனதால் அவளைத் தன் தோளின் மீது சுமந்து கொண்டும் அவன் சென்றான்.

வீட்டை நெருங்கியதும் கீதா சட்





டெனக் குதித்து வீட்டினுள் ஓடி "சித்தி! யாரோ ராட்சஸன் என்னைக் கல்யாணம் செய்து கொள்ளப் போவ தாக பயமுறுத்தித் துரத்திக் கொண்டு வந்திருக்கிறான். என்னைக் காப் பாற்று" என்று கூறினாள். சிங்கா ரியோ அதைக் கேளாதவள் போல அவள் தலை மயிரைப் பிடித்து உலுக்கி "நேற்றிரவு எங்கே போயி ருந்தாய்?" என்று கேட்டாள். அப் போது ராட்சஸன் வீட்டிற்குள் வந்து "ஏய் கிழவி! கையை எடு. அவளை ஏதாவது செய்தால் உன்னை ஒரே நசுக்கில் கொன்று விடுவேன்" என்று மிரட்டினான்.

சிங்காரி பயந்து போய் கீதாவை விட்டு விட்டு அவனிடம் "யாரப்பா நீ? என் வீட்டிற்குள் வந்து மிரட்டு கிறாயே" என்று கேட்டாள். அவனும் "நான் உன் மகள் கீதாவை மணக்க விரும்புகிறேன். அதற்கு உன் அனு மதி தேவை. இதற்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார்" என்றான். அவன் அழகாய் இருப்ப தைக் கண்டு அவன் ராட்சஸன் என்பதை அறியாமல் சிங்காரி "நீ போயும் போயும் இந்த தரித்திரம் பிடித்த கீதாவையா மணந்து கொள் ளப் போகிறாய்? என் மகள் பாமா வைப் பார். எவ்வளவு அழகாக இருக் கிறாள்? அவளுக்கென்று ஏராளமாக நகைகளும் பட்டாடைகளும் உள்ளன. அவற்றை எல்லாம் அணிந்து கொண் டால் அவள் அப்சரப் பெண் போல இருப்பாள். எனவே நீ என் மகள் பாமாவை மணந்து கொள். இதற்காக நீ வேறெதுவும் செய்ய வேண்டாம்" என்றாள்.

ராட்சஸனோ "அது முடியாது. நான் சொன்னால் சொன்னதுதான். கீதாவைத்தான் மணப்பேன்" என் றான். சிங்காரியும் "அப்படியானால் நான் மூன்று வேலைகளைச் சொல் வேன். நீ அவற்றைச் செய்தால் நீ கேட்டபடி கீதாவை மணந்து கொள்ள அனுமதி கொடுப்பேன். நீ அவற் றைச் செய்யாவிட்டாலோ என் மகள் பாமாவைத்தான் மணந்து கொள்ள வேண்டும். சம்மதமா?" என்று கேட் டாள். ராட்சஸனும் "குப்பை, கூளம் பெருக்குவதைத் தவிர வேறு எந்த

வேலை சொன்னாலும் செய்வேன். ஆனால் குப்பையைப் பெருக்கச் சொன்னால் உனக்கே ஆபத்து. இதை நினைவில் வைத்துக் கொள்" என்று எச்சரித்தான்.

சிங்காரி அவன் கூறியதைப் பொருட்படுத்தாமல் ஒரு பெரிய குண்டாவைக் காட்டி "நீ இது நிறை யத் தண்ணீரை என் வீட்டுக் கிணற்றி லிருந்து எடுத்து நிரப்ப வேண்டும்" என்றாள். அது பழங்காலக் குண்டா. பெரிய தொட்டியின் அளவானது. அது நிறையத் தண்ணீர் நிரப்ப ஒரு நாள் பிடிக்கும். அதைச் செய்ய அவன் மிகவும் சிரமப்படுவான் என சிங்காரி நினைத்தாள்.



ஆனால் ராட்சஸன் குண்டாவை எடுத்துக் கிணற்றுள் போட்டு அதில் நீர் நிரம்பியதும் அதை அப்படியே தூக்கி வெளியே கிணற்றின் பக்கம் வைத்தான். பிறகு சிங்காரியை அவன் கூப்பிட்டு "இந்தக் குண்டாவை எங்கே வைக்க வேண்டும்? அது என் இரண்டாவது வேலையாகி விடும்" என்றான்.

அது கண்டு சிங்காரி திகைத்தாலும் சற்று சமாளித்துக் கொண்டு "அது அப்படியே இருக்கட்டும். என் வீட்டி னுள் உள்ள சாமான்களை அவை இருக்க வேண்டிய இடங்களில் ஒழுங்காக வை" என்றாள். ராட் சஸனும் "ஓ! வைக்கிறேன். நீங்க ளெல்லாம் சற்று வெளியே போய் இருங்கள்" என்றான். எல்லோரும் வீட்டிற்கு வெளியே வந்து விட்டார் கள்.

சற்று நேரத்திற்குப் பின் ராட்ச ஸன் அவர்களையெல்லாம் வீட்டி னுள் வரும்படி அழைத்தான். அவர் கள் உள்ளே சென்று அந்தந்த சாமான்கள் அந்தந்த இடங்களில் வைக்கப்பட்டிருப்பது கண்டு ஆச்சரி யப்பட்டார்கள். சிங்காரி அது கண்டு திருப்தி அடைந்தாலும் வீட்டில் சில இடங்களில் குப்பை இருப்ப தைக் கண்டாள். அவள் அவனிடம் "இதுவரை. செய்ததெல்லாம் சரி. இந்தக் குப்பை கூளத்தையெல்லாம் பெருக்கி எடுத்து வெளியில் போட்டு விடு" என்றாள்.

ராட்சஸனும் "எனக்கென்ன

தாராளமாகச் செய்கிறேன். ஆனால் அதன் விளைவுதான் விபரீதமாக இருக்கும். நான் ஆரம்பத்திலேயே இதுபற்றி உன்னை எச்சரித்திருக் கிறேன். இதனால் உனக்குத்தான் ஆபத்து என்றும் சொன்னேன். நீ அதை லட்சியம் செய்யவில்லை போலிருக்கிறது. நீ கூறியபடி இந்த வீட்டிலுள்ள குப்பைகளை எல்லாம் எடுத்து வெளியே வீசி எறிந்து விடுகிறேன் பார். இந்த வீட்டில் கிடக்கும் குப்பைகளில் நீயும் உன் மகள் பாமாவும் சேர்ந்தவர்களே" எனக் கூறி குப்பை கூளத்தோடு அவர்களையும் சேர்த்துப் பலம் கொண்டு எறிந்தான். பிறகு அவன் கீதாவிடம் "இப்போது அவர்கள் இருவரும் ஊருக்கு வெளியே வெகு தூரமுள்ள பாறைகளின் மீது விழுந்து இறந்தே போயிருப்பார்கள். இனிமேல் இங்கே வரவே மாட்டார் கள்" என்றான்.

கீதா ஆச்சரியப்பட்டு "இவ்வளவு சக்தியுடைய நீ அவர்களை முதலி லேயே கொன்றிருக்கலாமே. ஆனால் அவள் சொன்ன மூன்று வேலை களைச் செய்ய ஏன் ஒப்புக் கொண் டாய்?" என்று கேட்டாள். அவனும் "எல்லாம் உனக்காகத்தான். நீ நம் திருமணத்திற்கு உன் தாயின் அனு மதி தேவை என்றாய். அதைப் பெறவே அவள் சொல்லும் மூன்று வேலைகளைச் செய்ய ஒப்புக் கொண் டேன்" என்றான்.

மானிடப் பெண்ணாக இருந்தும் தன் முகத்தில் கொதிக்கும் எண் ணெயை விட எண்ணிய ராட்சஸ குணம் படைத்த சிங்காரியையும் பாமாவையும் விட ராட்சஸனாக இருந்தும் மனித உள்ளம் படைத்த அந்த ராட்சஸனே உயர்ந்தவன் என கீதா எண்ணினாள். மேலும் அவன் அவளுக்காக எதையும் செய்யத் தயாராகித் தன் உருவைக் கூட ஒரு அழகிய வாலிபனாக மாற்றிக் கொண்டதை நினைத்து அவள் திருப்தி அடைந்து அவனை மணந்து கொண்டு சுகமாக வாழ்ந்து வந்தாள்.






# புவனசுந்தரி

பிரிஜியா நாட்டில் ட்ராய் நகரின் மன்னனாக வர்த்தனன் இருந்தான். அவன் மனைவி கர்ப்பமுற்று இருக்கையில் ஒரு கனவு கண்டாள். அதில் தன் கர்ப்பத்திலிருந்து ஒரு கொள்ளிக் கட்டை வெளிவந்து அதிலிருந்து நெருப்புப் பொறிகள் கிளம்பி ட்ராய் நகரையே அழித்தது போலவும் தோன்றியது. அவள் பயந்து கத்திக் கண் விழித்துத் தான் கண்ட கனவைத் தன் கணவனிடம் கூறினாள்.

வர்த்தனன் தன் புதல்வர்களில் சிறந்த அறிவாளியான ஞானி என்பவனிடம் அக் கனவு பற்றிக் கூறவே அவனும் "ராணிக்குப் பிறக்கப் போகும் குழந்தையால் இந்நாட்டிற்கே கேடு என்பது பொருள். எனவே ராணிக்குக் குழந்தை பிறந்ததும் அதைக் கொன்று விடுங்கள்" என்றான்.

அதைக் கேட்ட மன்னன் திகைத்துப் போனாலும் ஞானி சொன்னபடி நடக்கும் என நம்பியதால் நாட்டின் நன்மையைக் கருதி பிறக்கப் போகும் குழந்தையைக் கொன்று விடுவது என்று தீர்மானித்துக் கொண்டான்.

சில நாட்களுக்குப் பின் ராணிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. வர்த்தனன் அதைக் தன் மாடு மேய்ப்பவனிடம் கொடுத்து அதைக் கொன்று விடும்படிக் கட்டளையிட்டான். அந்த மாடு மேய்ப்பவனுக்குத் தன் கையால் அக்குழந்தையைக் கொல்ல மனம்

-கிரேக்கப்புராணக் கதை-




இல்லை. அதைக் காட்டில் எங்காவது ஓரிடத்தில் வைத்துவிட்டுப் போனால் அதனை சிங்கம், புலி போன்ற கொடிய மிருகம் கொன்று தின்னட்டும் அல்லது பசியால் துடிதுடித்து இறந்து போகட்டும் என்று அவன் நினைத்தான். அதனால் அதை எடுத்துப் போய் ஒரு மலை உச்சியில் வைத்து விட்டு வந்து விட்டான்.

அக்குழந்தையை ஒரு பெண் கரடி கண்டது. அது அக்குழந்தைக்குப் பாலூட்டி வளர்த்து வந்தது. இப்படியாக ஒரு வாரம் கழிந்தது. தான் விட்டுப் போன குழந்தை என்னவாயிற்று எனக் காண அந்த மாடு மேய்ப்பவன் வந்தான். அக்குழந்தைக்கு ஒரு கரடி பாலூட்டுவதைக் கண்டு திகைத்து நின்றான். அக்குழந்தை பிழைக்க வேண்டும் என்று விதி இருக்கிறது என்று எண்ணிய அவன் கரடி குழந்தையை விட்டுப் போனதும் அதை எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்குப் போனான். அது மிக அழகாக இருந்ததால் அதற்கு மோகன் என்று பெயரிட்டு வளர்த்து வந்தான்.

மோகன் மாடு மேய்ப்பவன் வீட்டில் வளர்ந்து பெரியவனானான். அவன் நல்ல அறிவாளியாகவும் பலசாலியாகவும் அழகனாயும் விளங்கலானான். அவன் சிறுவனாக இருந்து மாடுகளை மேய்க்கையில் சில திருடர்கள் சில மாடுகளைத் திருடிக் கொண்டு ஓடினர். மோகன் அவர்களைத் தாக்கி விரட்டிவிட்டு மாடுகளை மீட்டு வந்தான்.

மோகன் தன் மந்தையிலுள்ள மாடுகளை மோதவிட்டு வேடிக்கை பார்ப்பான். மோதலில் வெற்றி பெற்ற மாடுகளின் கொம்புகளில் மலர் சூட்டி மகிழ்வான். தன் மந்தை மாடுகளைப் பிற மந்தை மாடுகளுடன் மோதப் பந்தயமும் வைப்பான். பந்தயத்தில் வென்ற மாடுகளுக்கு கொம்புகளில் அணியத் தங்கப் பூண்களைப் பரிசளிப்பான்.

மோகனைக் கரடி வளர்த்த மலைச் சிகரத்தின் பெயர் ஜடா என்பதாம். அப்பகுதியில்தான் மோகன் மாடுகளை மேய்த்து வந்தான். அதே

சமயம் தேவலோகத்தில் ஒரு திரு மணம் நடக்க அதற்குப் பல தேவதைகள் வந்திருந்தன. அப்போது கலகப் பிரியை என்ற தேவதை ஒரு தங்கப் பழத்தைப் போட்டது. அதன் மீது இது மிக அழகானவளுக்கான பரிசு என்று எழுதப்பட்டிருந்தது. அப் பழத்தை அடைய மூன்று தேவதைகளே போட்டி போட்டன. பூபுத்திரி, புத்திமதி, காமினி என்பவையே அவை.




அம்மூவரில் யார் மிக அழகானவள் என்று யாராலும் தீர்ப்பு கூற முடியவில்லை. எனவே அவர்கள் தனித்தனியே போய் தேவநாதனைக் கண்டு தம்மில் யார் மிகவும் அழகானவள் என்று கேட்டார்கள். அவனும் "இதற்கு என்னால் தீர்ப்பு கூற முடியாது. ஐடா மலைச் சிகரத்தில் மோகன் என்பவன் இருக்கிறான். அவன் மிகச் சிறந்த அறிவாளி. அவனிடம் போய்க் கேளுங்கள். அவன் சரியான தீர்ப்பைச் கூறுவான்" என்று சொல்லி அனுப்பினான்.

அந்த மூன்று தேவதைகளும் ஐடா பர்வதத்தை அடைந்து மோகனைக் கண்டனர். அவனிடம் தங்கப் பழத்தைக் கொடுத்து "இது எம் மூவரில் யாருக்குச் சேர வேண்டும்?" என்று கேட்டார்கள்.

மோகனும் "நான் மாடு மேய்க்கும் சாதாரண மனிதன். தேவதைகளின் அழகு பற்றி எனக்கு என்ன தெரியும்? வேண்டுமானால் இதை மூன்று சம பாகங்களாக நறுக்கித் தருகிறேன். ஆளுக்கு ஒன்றாக எடுத்துச் செல்லுங்கள்" என்று கூறி நழுவப் பார்த்தான்.

அவர்களோ "இது தேவநாதனின் கட்டளை. அதனால் நீதான் எங்களுக்குத் தீர்ப்பு கூறியாக வேண்டும். அவர் கட்டளையை நீ மட்டும் மீறினால் கடும் விளைவே ஏற்படும்" என்று பயமுறுத்தவே மோகனும் "சரி. என் முடிவை நீங்கள் மூவரும் ஏற்க வேண்டும். என் மீது ஆத்திரம் கொள்ளக்கூடாது. ஒருவேளை என் முடிவு தவறானாலும் அதை மதிக்க வேண்டும்" என்றான். அவர்களும் அதற்கு ஒப்புக் கொண்டார்கள்.

அவனும் "நீங்கள் மூவரும் ஒன்றாக நின்றால் என்னால் எதையும்

தீர்மானிக்க முடியாது. நீங்கள் சற்று தூரம் போய் நின்று ஒவ்வொருவராக என் முன் வாருங்கள்" என்றான். அதன்படி மூவரும் சற்று தூரத்தில் போய் நின்றார்கள்.

முதலில் பூபுத்திரி மோகன் முன் வந்து ஒரு சுற்று சுற்றி ஆடி நின்று "நீ எனக்கு இப்பழத்தைத் தந்தால் உன்னைப் போரில் யாருமே வெல்ல முடியாது என்ற வரம் அளிப்பேன். அழகிலும் அறிவிலும் உன்னை மிஞ்சியவர்கள் உலகிலேயே இல்லை எனச் செய்வேன்" என்றாள்.

மோகனும் "நானோ மாடு மேய்ப்பவன். எனக்குப் போரெல்லாம் எதற்கு?" என்று கூறி அனுப்பி விட்டான். அடுத்து வந்த புத்திமதி "மோகன்! நீ எனக்கு இப்பழத்தைக் கொடுத்தால் உன்னை ஆசியாக் கண்டத்தின் சக்கரவர்த்தியாக்குவேன். உலகிலேயே உன் போன்ற பணக்காரன் வேறு யாரும் இருக்க மாட்டான்" என்றாள்.

மோகனோ "எனக்கு நாடு வேண்டும் என்ற ஆசை கிடையாது. பணம் வேண்டும் என்ற பேராசையும் இல்லை. இந்த மாதிரி லஞ்சம் பெற்று நான் தீர்ப்புக் கூறமாட்டேன்" எனக் கூறி அவளை அனுப்பி விட்டான். அடுத்து காமினி வந்து "மோகன் இந்த நாட்டில் உன்னை விட அழகானவன் யாருமே இல்லை. உனக்கு மனைவியாக ஸ்பார்ட்டா அரசகுமாரி புவனசுந்தரியே ஏற்றவள். அவள் இவ்வுலகிலேயே அழகானவள்" என்றாள்.



"நான் அவளைப் பற்றிக் கேள்விப் பட்டதே இல்லையே" என மோகன் கூறவே காமினியும் "அப்படியா? கிரீஸிலுள்ள அரசகுமாரர்கள் எல் லாம் அவளை மணந்து கொள்ள முன் வந்தார்கள். ஆனால் அவள் மன்னனாகப் போகிறவனின் தம்பி யான பிரதாபனை மணந்து கொண் டாள். நீ விரும்பினால் அவளை அடையலாம்" என்றாள்.

மோகனும் "அதெப்படி? அவளுக் குத்தான் மணமாகி விட்டதே" என் றான். எனவே காமினி "ஆனால் என்ன? அவள் உன்னைப் பார்த்த தும் அவள் மனம் உன்னையே நாடும்ப்படிச் செய்து விடுவேன். அதன்பின் அவள் வீடு, வாசல், கணவன் என்ற எல்லாவற்றையும் துறந்துவிட்டு உன் பின்னாலேயே சுற்றி வருவாள்" என்றாள்.

மோகனும் "ஆ! அப்படிப்பட்ட அழகியை எனக்குக் கிடைக்கச் செய்ய உன்னால் முடியுமா? இதற்கு நீ சத் தியம் செய்து கொடுப்பாயா?" என்று கேட்டான். காமினி சத்தியம் செய்து கொடுக்கவே மோகன் பழத்தை அவளுக்குக் கொடுத்து விட்டான். அதுகண்டு மற்ற இருவருக்கும் கோபம் வந்தாலும் அவர்கள் முதலில் ஒப்புக் கொண்டபடி அந்தத் தீர்ப்பை ஏற்றுக் கொண்டு சென்றனர்.

புவனசுந்தரி உண்மையிலேயே மிக அழகானவள். அவளுக்கு இணை யாருமே இல்லை. அவள் தந்தை தேவநாதன். தாய் மாலினி. அவள் ஒரு அன்னப்பட்சியின் முட்டையிலி





ருந்து பிறந்தவளாம். சிறுவயதிலேயே அவளை ஸ்பார்ட்டா மன்னன் மார்த் தனன் அருமை பெருமையாக வளர்த்து வந்தான். அவள் திருமண வயதை அடைந்ததும் பல அரச குமாரர்கள் போட்டி போட்டுக் கொண்டு அவளை மணக்க ஸ்பார்ட் டாவிற்கு வந்தனர். அப்படி வந்தவர் களுள் பிரதாபனும் ஒருவன். எல்லா அரசகுமாரர்களும் ஏதோ ஒரு பரி சைக் கொண்டு வந்திருந்தார்கள்.

மார்த்தனன் யோசனையில் ஆழ்ந் தான். புவனசுந்தரியை யாராவது ஒரு அரசகுமாரனுக்குத்தான் விவா கம் செய்து வைக்க முடியும். அப்ப் டிச் செய்தால் மற்ற அரசகுமாரர்கள் அவனையும் புவனசுந்தரியையும் தாக்குவார்கள். எனவே அவன் என்ன செய்வது என்று யோசிக்கும் போது ஒரு பரிசும் எடுத்து வராத ரூபதரன் என்ற அரசகுமாரன் மார்த் தனனைக் கண்டு "உங்கள் பிரச் சினை எனக்குப் புரிகிறது. எனக்கு உங்கள் சகோதரர் சந்திரதத்தரின் மகளான பத்மமுகியை மணம் செய்து வைப்பதாக வாக்களித்தால் நான் உங்களது சிக்கலைத் தீர்க்க வழி சொல்கிறேன்" என்றான்.

மார்த்தனனும் "பத்மமுகியை உனக்கு மணமுடிக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன். நீ சிக் கலைத் தீர்க்கும் வழியைச் சொல்" என்று கேட்டான். ரூபதரனும் "நீங்கள் வந்திருக்கும் அரசகுமாரர்களை எல் லாம் ஓரிடத்தில் கூட்டுங்கள். புவன சுந்தரியை யார் மணந்தாலும் அவனை மற்றவர்கள் தாக்கி தீங் கிழைக்கக் கூடாது என்று அவர்களை சத்தியம் செய்யச் சொல்லுங்கள். மேலும் யாராவது தாக்கினால் மணமகனுக்கு அவர்கள் உதவுவ தாக வாக்கில் பெறுங்கள். இதற்குப் பிறகு திருமணம் நன்கு நடக்கும்" என்றான்.

இது மார்த்தனனுக்கு நல்ல யோசனை என்றே பட்டது. அதன் படி அவன் அரசகுமாரர்களை எல் லாம் அழைத்து "நீங்கள் எல்லோரும் என் மகளை மணம் செய்து கொள்ள விரும்புகிறீர்கள். ஆனால் அவள் உங்களில் ஒருவரைத்தானே மணக்க

முடியும். அவளை மணந்தவனை ஆத்திரத்தால் யாராவது தாக்கவும் முயலலாம். அப்போது நீங்கள் மண மகனின் உதவிக்குச் செல்வதாக இப் போது எனக்கு வாக்களிக்க வேண் டும். இதன் பிறகே புவனசுந்தரியை யார் மணப்பது என்பது தீர்மானிக்கப் படும்" என்றான்.

அரசகுமாரர்களும் மார்த்தனன் கேட்டபடி சத்தியம் செய்து கொடுத் தார்கள். அதன்பிறகு மார்த்தனன் பிரதாபனைத் தேர்ந்தெடுத்து புவன சுந்தரியை அவனுக்கு மணமுடித்து வைத்தான். சிறிது காலத்திற் குப்பின் மார்த்தனன் இறக்கவே பிரதாபன் ஸ்பார்ட்டாவின் மன்னனா னான்.

புவனசுந்தரியின் விவாகத்தின் போதே ரூபதரனுக்கும் பத்மமுகிக்கும் திருமணம் நடந்தது. பத்மமுகியின் தந்தை ரூபதரனிடம் "மாப்பிள்ளை! என்னால் என் மகளை விட்டுப் பிரிந்திருக்க முடியாது. அதனால் நீங்கள் ஸ்பார்ட்டாவிலேயே இருந்து விடுங்கள்" என்று கூறினான். ஆனால் ரூபதரன் இதற்கு இணங்க வில்லை. தன் தேரில் தன் மனை வியை அமர்த்திக் கொண்டு அவன் இதாகாவிற்குக் கிளம்பிச் சென்றான்.

சந்திரதத்தனோ "மகளே! மகளே!" என்று கத்திக் கொண்டு அந்தத் தேரின் பின்னாலேயே ஓடினான். அப்போது ரூபதரன் தன் மனைவி யிடம் "நீ உன் தந்தையோடு செல்லப் போகிறாயா அல்லது என்னோடு வரப் போகிறாயா?" என்று கேட் டான். அவளோ பதில் எதுவும் கூறாமல் தன் முகத்தை முகத்திரை யால் மறைத்துக் கொண்டாள்.

அப்போது சந்திரதத்தன் தன் தவறை உணர்ந்து தன் மகளைக் கணவனோடு போக விட்டான். இந்த சம்பவம் நிகழ்ந்த இடத்தில் அவன் தன் மகளின் சிலை ஒன்றை நிறுவி னான். அது இன்னமும் ஸ்பார்ட்டா நகரிலிருந்து நான்கு மைல் தொலை யில் இருப்பதைக் காணலாம்.

**(தொடரும்)**



# சகுனம் பார்ப்பதா!

ராமய்யனுக்குச் சகுனம், நல்ல நேரம் இவைகளிலெல்லாம் முழு நம்பிக்கை உண்டு. ஒருநாள் அவன் ஒரு முக்கியமான வேலையாகக் கிளம்பிக் கொண்டிருந்தபோது யாரோ தும்மினான். அது அபசகுனம் என நினைத்து ராமய்யன் வீட்டிற்குத் திரும்பிச் செல்கையில் உள்ளூர் கிட்டு சாஸ்திரி வேகமாகச் சென்று கொண்டிருப்பது கண்டு ஆச்சரியப்பட்டான். அவரும் சகுனம் பார்ப்பவரே. யாரோ தும்மியதையும் பொருட்படுத்தாமல் அப்படி அவசர வேலை அவருக்கு என்னவோ என்று ராமய்யன் யோசித்து தானும் தன் வேலையாக உடனே கிளம்பினான்.

அவனது வேலையும் நல்லவிதமாகவே முடிந்தது. அவன் கிட்டு சாஸ்திரியைக் கண்டு "நீங்கள் யாரோ தும்மியது கேட்டும் அது அபசகுனம் என நினைக்காமல் உங்கள் வேலையாகப் போனது பார்த்து நானும் என் வேலையாகப் போனேன். அது நல்லவிதமாகவே முடிந்தது" என்றான்.

கிட்டு சாஸ்திரியோ "இப்போது நான் எதையும் கவனமாகப் பார்ப்பதும் கேட்பதும் இல்லை போலிருக்கிறது. நான் வேகமாகப் போனது என் வீட்டை அசுத்தப்படுத்திய ஒரு நாயை துரத்திக் கொண்டுதான். சகுனம் பார்க்காமல் போக நான் என்ன முட்டாளா?" என்றார்.

ராமய்யனுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. ஆனால் அன்றே அவனுக்குச் சகுனத்தின் மீதிருந்த நம்பிக்கை போய் விட்டது.






# அவள் உயர்ந்தாள்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத் தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக் கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன் னனே! இந்த பயங்கர நிசியில் நீ உறுதியுடன் முயன்று கொண்டிருக் கிறாய். சில சமயங்களில் மனஉறுதி யும் சக்தியும் கொண்ட தவயோகியர் களைக் கூடச் சாதாரண மனிதர்கள் செயலற்றுப் போகச் செய்திருக்கிறார் கள். இதற்கு ஒரு கதை கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

தவளகிரி என்ற கிராமத்தில் தன பாலன் என்ற இளைஞன் இருந் தான். சிறுவயதில் அவனது தாய் தந்தையர் அவனுக்கு மிகவும் செல்

வேதாளம் சொல்லும் கதை



லம் கொடுத்து வளர்த்து விட்டதால் அவனிடம் பல கெட்ட பழக்கங்கள் குடி கொண்டு விட்டன. அவனுக்கு ஒரு கல்யாணத்தைச் செய்து வைத்தால் அவன் திருந்தி விடுவான் என அவனது தந்தை நினைத்தான். அவனைத் திருத்த பொறுமைமிக்க நல்ல பெண் வேண்டும். அப்படிப் பட்ட பெண்ணாக அவன் தேடலானான்.

தவளகிரிக்கு அடுத்த ஊரிலே அகல்யை என்ற அடக்கமான பெண் இருப்பது கேள்விப்பட்டு தனபாலனின் தந்தை அவ்வூருக்குச் சென்றான். அகல்யையின் தந்தை ஏழை. அவன் நோயாளியான தன் மனைவிக்கு எப்படி வைத்தியம் செய்வது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தான். ஏனென்றால் அவ்வூர் வைத்தியர் அவளுக்கு வைத்தியம் செய்ய ஆயிரக்கணக்கில் செலவாகும் என்று கூறினார். அவ்வளவு பணத்திற்கு அவன் எங்கே போவான்? அவனுக்குக் கடன் கொடுப்பார் யாருமில்லை.

அகல்யையோ தன் தாயின் நிலை கண்டு கலங்கிப் போய் அவ்வூர் பணக்காரர் பஞ்சநதத்தின் மனைவியிடம் உதவி கேட்க அவளது வீட்டிற்குச் சென்றாள். பஞ்சநதத்தின் மனைவியை அகல்யை நன்கு கவனித்து கடும் நோயிலிருந்து முன்பு ஒரு தடவை காப்பாற்றினாள். அதனால் தன் தாயின் நோயைப் போக்கத் தனக்கு அவளது பண உதவி கண்டிப்பாகக் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு அவள் அங்கு சென்றாள்.

பஞ்சநதத்தின் வீட்டிற்கு அப்போது தனபாலனின் தந்தை வந்திருந்தான். அவன் அகல்யைக் கண்டு அவள்தான் தான் தேடி வந்த பெண் என்று அறிந்து கொண்டான். அவன் உடனேயே அவளது தாயின் நோயைப் போக்கப் பொருளுதவி செய்தான். அகல்யையின் தந்தை அவ்வூரில் வாங்கி இருந்த கடன்களை எல்லாம் அவன் தீர்த்தான்.

அதற்குப் பின் தனபாலனின் தந்தை அகல்யையின் தந்தையிடம் "எனக்கு இந்த ஊரிலும் நான்கு ஏக்கர் விளைச்சல் நிலம் உள்ளது.

அதில் நீங்கள் பயிர் செய்து கொள்ள லாம். இதற்கெல்லாம் பதிலாக நீங் கள் உங்கள் மகளை என் மகன் தனபாலனுக்கு கல்யாணம் செய்து கொடுக்கச் சம்மதிக்க வேண்டும்" என்றான்.

அகல்யையின் தந்தையோ "உங் கள் மகனைப் பற்றி எல்லோருமே நல்ல அபிப்பிராயம் கூறவில்லையே. அதனால்தான் என் மகளை அவ னுக்கு மணம் செய்து வைக்க முடி யாது" என்றான். தனபாலனின் தந் தையும் "என் மகனைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டதெல்லாம் உண்மையே. உங்கள் மகள் மிகவும் பொறுமை சாலி. நற்குணங்கள் கொண்டவள். அவ்ளை என் மகனுக்கு கல்யாணம் செய்து வைத்தால் என் மகனும் திருந்துவான். உங்களது பொருளா தார நிலையும் உயரும்" என்றான்.

அவர்கள் பேசியதைக் கேட்டுக் கொண்டிருந்த அகல்யை தன் தந்தையிடம் "அப்பா! நீங்கள் இந்தத் திருமணத்திற்குச் சம்மதியுங்கள். அத னால் நம் குடும்பத்திற்கு நன்மையே" என்றாள். அகல்யையின் தந்தையும் ஒருவாறு அதற்கு இணங்கவே விரை வில் அகல்யைக்கும் தனபாலனுக்கும் திருமணமும் நடந்தது.

தனபாலன் கல்யாணமான புதி தில் தன் மனைவி தன் செய்கை ஒவ்வொன்றிற்கும் காரணம் கேட்டுத் துளைப்பாளோ என்று கவலைப்பட் டுக் கொண்டிருந்தான். ஆனால்



அவள் அப்படியெல்லாம் கேளாமல் அவன் இஷ்டப்படி நடக்க விட்டு விட்டாள். அதனால் அவன் போக்கு மேலும் மோசமாகி விட்டது.

இதைக் கண்ட தனபாலனின் தந்தை அகல்யையிடம் "என்னம்மா இது? நீ வந்து அவனைத் திருத்து வாய் என்று நினைத்தேன். ஆனால் நீ அவனை அவன் போக்கிலேயே போக விட்டு விட்டாயே. இப்படியே போனால் நம் சொத்தெல்லாம் விரைவில் அழிந்து விடும். நீ அவ னுக்கு அறிவுரைகள் கூறி நல்லவழிக் குக் கொண்டு வா" என்றாள்.

அகல்யையோ "நீங்கள் பெரியவர். உங்கள் பேச்சை நான் மதிக்க வேண்டும். ஆனால் எனக்கு என்



நலம் குன்றிப் படுத்த படுக்கையாகக் கிடந்தான். வைத்தியர்கள் வந்து பார்த்து விட்டு "இவன் அதிக நாட்கள் உயிர் வாழ மாட்டான்" என்று கூறிவிட்டுப் போய் விட்டார்கள். அகல்யை மட்டும் மனம் தளராமல் தன் கணவனுக்குப் பணிவிடைகள் செய்து வந்தாள்.

தனபாலனின் தாய் தந்தையரோ தன் மகனின் ஆரோக்கியம் மேம்பட வேண்டும் என்பதற்காக சாதுக்களையும், சன்னியாசிகளையும், யோகீஸ்வரர்களையும் போய்ப் பார்த்தார்கள். ஒருநாள் ஒரு யோகி அவர்களிடம் "உங்கள் மருமகள் கற்புக்கரசியாக இருந்தால் உங்கள் மகனின் உடல் நிலை தேறிவிட எவ்வித சிரமமும் இராது. இந்த ஊருக்குப் பக்கத்திலுள்ள காட்டில் பஞ்ச பாண தீர்த்தம் என்றொரு குளம் உள்ளது. அதன் கரையில் ஒரு மாமரம் உள்ளது. அதன் கீழ் ஒரு முனிவர் அமர்ந்து தவம் செய்து கொண்டிருக்கிறார். அவரது சக்தியால் அம்மரத்திற்கு எந்த வியாதியையும் போக்கும் சக்தி கிடைத்துள்ளது. அதன் வேரை எடுத்து வந்து உங்கள் மகனிடம் கொடுத்து வாயில் போட்டு மெல்லச் செய்தால் அவனுக்கு எந்த நோய் இருந்தாலும் மறைந்து விடும்" என்றார்.

அப்போது தனபாலனின் தந்தை "நானே போய் அந்த வேரை எடுத்து வருகிறேன்" என்றான். ஆனால்

கணவர் கடவுளுக்குச் சமானம். அவர் சுகமே என் சுகம். கணவனின் மனம் கோணாமல் நடப்பதே கற்புக்கரசியான அவன் மனைவியின் கடமை. ஒரு மனைவிக்குத் தன் கணவன்தான் முக்கியம். அதற்குப் பிறகுதான் மற்றவர்கள். எனவே என் கணவர் சம்மந்தமாக என்ன செய்யச் சொன்னாலும் அதன்படி நடக்க மாட்டேன். அதைத் தவிர வேறு என்ன சொன்னாலும் அதன்படி நடக்கிறேன்" என்றாள்.

அதுகேட்டு தனபாலனின் தந்தை பதில் பேசவில்லை. இனி நடக்கிறபடி நடக்கட்டும் என்று விட்டு விட்டான். தனபாலனோ நாளுக்கு நாள் கெட்டுச் சீரழிந்து முடிவில் உடல்

யோகியோ "கூடாது. அந்த வேரை உன் மருமகள்தான் எடுத்து வர வேண்டும். அதற்கும் ஒருமுறை உண்டு. அவள் தன் கணவனை ஒரு தட்டுக் கூடையில் உட்கார வைத்து அக்கூடையோடு அவனைச் சுமந்து கொண்டு அவள் அந்த மா மரத்தின் அடிக்குச் செல்ல வேண்டும். அந்த மரத்தடியே ஒரு முனிவர் தவம் செய்து கொண்டிருக்கிறார். அவரது சக்தியால்தான் அந்த மரத்தின் வேருக்கு அந்த மருந்து சக்தி கிடைத்துள்ளது. உன் மருமகள் கோடாலி எடுத்து அந்த மரத்தை வெட்டி வீழ்த்தினால் அதன் வேர்கள் தெரியும். அவற்றில் ஒன்றை நறுக்கி அவள் தன் கணவனின் வாயில் போட்டு அவனை மெல்ல வைக்க வேண்டும். அப்போது உன் மகன் உடல் தேறி ஆரோக்கியமுள்ள மனிதனாக ஆகி விடுவான்" என்றார்.

யோகி கூறியதை அகல்யையிடம் தனபாலனின் தந்தை கூறவே அவள் தன் கணவனை ஒரு தட்டுக் கூடையில் உட்கார வைத்து அக்கூடையை எடுத்து தன் தலை மீது வைத்துக் கொண்டு பஞ்சபாண தீர்த்தத்தைத் தேடிச் சென்றாள். வழி கரடுமுரடாக இருந்ததால் அவள் சிரமப்பட்டு நடந்தாள். காட்டில் கொஞ்சதூரம் போனதும் அவள் கால் இடறி விழுந்தாள். அவள் சுமந்து வந்த கூடையோடு தனபாலனும் விழுந்து விட்டான்.



அதுகண்டு அவள் பதறிப் போனாள். அவளுக்கு காயம் எதுவும் ஏற்படவில்லை. கீழே விழுந்ததில் அவள் ஒருபுறத்திலும் அவளது கணவன் சற்று தூரத்திலும் விழுந்து கிடந்தனர்.

அவள் மெதுவாக எழுந்து சற்று தூரத்தில் முனகிக் கொண்டிருந்த தன் கணவனை மீண்டும் கூடையோடு தன் தலை மீது வைத்துக் கொண்டாள். அப்போது அவன் "எனக்கு ஒரே தாகமாக இருக்கிறது. குடிக்கக் கரும்புச் சாறு வேண்டும்" என்றான்.

அவள் அங்கே கரும்புச் சாறு எங்கே கிடைக்குப் போகிறது என்று எண்ணி சுற்றிலும் பார்த்தாள். சற்று தூரத்தில் ஒரு குளமும் அதன்



கரைமீது ஒரு மாமரமும் தென் பட்டது. அதுதான் பஞ்சபாண தீர்த் தம் என அறிந்து அவள் கோடா லியை எடுத்துக் கொண்டு மரத் தைப் பார்த்தாள். அதில் தங்க நிற மாங்கனிகள் தொங்கிக் கொண்டி ருந்தன.

அவள் அதிலிருந்து ஒரு கனி யைப் பறிக்கவே அது தங்கப் பாத் திரமாக மாறியது மட்டுமல்லாமல் அதில் நிறையக் கரும்புச் சாறும் இருந்தது. அவள் அதைத் தன் கண வனுக்குக் கொடுத்துக் குடிக்க வைத் தாள். பிறகு கோடாலியை எடுத்து அந்த மரத்தை வெட்ட அவள் போனாள்.

அப்போது சடைமுடியுடன் கூடிய ஒரு முனிவர் அவள் முன்வந்து "வெட்டாதே. யார் நீ? இதை ஏன் வெட்ட வந்தாய்?" என்று கேட்டார். அகல்யையும் தன் கணவனின் உடல் நிலை பற்றி அவரிடம் கூறவே அந்த முனிவரும் "அந்த யோகி சொன்னது உண்மையல்ல. அதைக்கேட்டு நீ இங்கு வந்தது முட்டாள்தனம்" என் றார்.

அகல்யையோ "எனக்கு அவர் சொன்னதில் நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. எனவே என் முயற்சியைக் கைவிடப் போவதில்லை" என்று கூறிக் கோடாலியை உயரத் தூக்கி னாள். அந்த முனிவரோ "இது என் சக்தியால் வளர்ந்த மரம். இதை அழிய விட மாட்டேன்" எனக் கூறி ஏதோ மந்திரத்தை உச்சரிக் கவே அகல்யையின் கையிலிருந்த கோடாலி உயரப் போய் அந்தரத்தில் நின்றது.

அப்போது அகல்யை முனிவரின் கால்களில் விழுந்து "நீங்கள் சக்தி வாய்ந்தவர். என் கணவரைக் காப் பாற்றுங்கள்" என்று வேண்டினாள். அவரோ "உன் கணவன் மகாப் பாவி. தன் பாவங்களுக்கான தண் டனையை அவன் அனுபவித்தேயாக வேண்டும். அவனைக் கடவுளால் கூடக் காப்பாற்ற முடியாது" என் றார்.

அப்போது அகல்யை "நான் கற் புடையவள் என்பது உண்மையா னால் அந்தக் கடவுள் எனக்கு உத

வட்டும்" என்றாள். மறுநிமிடமே அந்தரத்தில் நின்ற கோடாலி மாமரத்தை வெட்டலாயிற்று. முனிவர் அதைத் தடுக்க என்னென்னமோ மந்திரங்களை உச்சரித்துப் பார்த்தார். ஆனால் கோடாலி மரத்தை அடியோடு வெட்டிச் சாய்த்து விட்டது.

அம்மரத்தின் வேர் வெளியே தென்படவே அகல்யை ஒரு வேரை நறுக்கி அந்தத் துண்டைத் தன் கணவனின் வாயில் போட்டு அதை மெல்ல வைத்தாள். தனபாலன் சற்று நேரத்தில் உடல் நலமடைந்து எல்லோரையும் போலாகி விட்டான். அகல்யையும் தனபாலனும் முனிவரை வணங்கிவிட்டு அங்கிருந்து சென்றார்கள். முனிவரோ ஒரு சாதாரணப் பெண்முன் தன் சக்தி பலிக்கவில்லையே என்று எண்ணி மனம் குமறினார்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னா! அகல்யை தன் சுயநலம் கருதித்தானே மாமரத்தை வெட்டினாள்? ஆனால் தன் நலம் கருதாமல் தவம் புரிந்த முனிவரின் சக்தி அவளது செயலைத் தடுக்க முடியாது போயிற்றே. இது ஏன்? என் சந்தேகத்திற்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "அகல்யை தனக்காக அல்லாது தன் கணவனுக்காகத்தான் மரத்தை வெட்டினாள். முனிவரோ பிறருக்காக எதுவும் செய்யாமல் தான் மோட்சம் அடைய வேண்டும் என்பதற்காகத் தவம் செய்தார். இது தான் சுயநலம். அவரால் தனக்கு இடமளித்த மாமரத்தைக் கூட காக்க முடியவில்லை. எனவேதான் பிறருக்காக உதவிய அகல்யை உயர்ந்தாள். முனிவர் தாழ்ந்தார்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# யாருக்கும் நஷ்டமில்லை!

புதுப்பட்டண வீதியில் ஒருவன் கூடைச் சுமையோடு கடை வீதியில் நடந்து போகையில் கால் தடுக்கிக் கீழே விழுந்தான். அவனது கூடையிலிருந்த கண்ணாடி சாமான்கள் விழுந்து நொறுங்கிப் போயின. அவனைச் சுற்றிப் பலர் நின்று "அட பாவமே!" என்று பரிதாபப்பட்டார்கள்.

கூட்டத்திலிருந்து ஒருவன் வந்து "ஐயோ பாவம்! இவனது எஜமானன் இவனிடமிருந்து இந்தக் கண்ணாடி சாமான்களின் விலையைச் சம்பளத்தில் பிடித்துக் கொள்வானே! பாவம்! இவனுக்கு என்னாலான உதவி செய்கிறேன்" என்று ஒரு ரூபாயை எடுத்துப் போட்டான். இது கண்டு பலரும் அரை ரூபாய், ஒரு ரூபாய் என்று போட்டார்கள். கூடைக்காரனும் அவற்றைப் பொறுக்கி எடுத்துக் கொள்ளவே இன்னொருவன் "நீ இந்தப் பணம் கொண்டு கண்ணாடி சாமான்களை வாங்கிக் கொண்டு போ. அப்போது உன் எஜமானன் உன்னைத் திட்ட மாட்டான். உனக்கும் நஷ்டமில்லை. ஆமாம். உன் எஜமானன் யார்?" என்று கேட்டான்.

கூடைக்காரனும் "முதலில் எனக்கு ஒரு ரூபாய் போட்டாரே அவர்தான் என் எஜமானன். அவர் பணம் போட்டதால் அவருக்கும் நஷ்டமில்லை. எனக்கும் நஷ்டமில்லை பாருங்கள்" என்றான் சிரித்தவாறே.



# அம்புலிமாமா அனுபந்தம் - 72

நம் நாட்டு மரங்கள் :

## அசோகமரம்

இராவணன் சீதையைக் கவர்ந்து சென்று இலங்காபுரியில் அசோக வனத்தில் ஒரு அசோக மரத்தடியில் சிறை வைத்ததாக இராமாயணம் கூறுகிறது. அனுமாரும் சீதையை அசோக மரத்தின் கீழ்தான் முதலில் கண்டாராம். அதனால் ஹிந்துக்கள் அசோக மரத்தைப் புனிதமான மரமாகக் கருதுகிறார்கள்.

கௌதம புத்தர் லும்பினி வனத்தில் பிறந்தது ஒரு அசோக மரத்தின் கீழ் தானாம். அசோகச் சக்கரவர்த்தி அந்த மரத்தின் ஒட்டுச் செடி ஒன்றை எடுத்து ஸ்ரீ லங்காவிலுள்ள அநுராதபுரத்திற்கு அனுப்பி அங்கு நடச் செய்தாராம். பௌத்தர்களும் அசோக மரத்தைப் புனிதமாகக் கருதுகிறார்கள்.




ஈரமாக உள்ள பகுதிகளில் அசோக மரங்களை அழகிற்காக வளர்க்கிறார்கள். சுமார் 10 மீட்டர் உயரம் வளர்ந்து சிறு சிறு கிளைகளை இம்மரம் கொண்டிருக்கும். இலைகள் அடர்ந்து வளரும். இலைகள் நிறைய இருப்பதால் கிளைகள் சாய்ந்தே இருக்கும். இதன் நடுப்பகுதி மட்டும் உயரமாக வளரும். கொத்துக் கொத்தாகப் பூக்கும் மலர்கள் முதலில் மஞ்சளாயும் பிறகு ஆரஞ்சு நிறமாயுமாகி முடிவில் சிவப்பாகி விடும்.

அசோக மலர்களைப் பூஜைக்கு உபயோகிக்கிறார்கள். இதன் மலர்களும் இலைகளும் சில மருந்துகள் தயாரிக்கப் பயன்படுகின்றன.

# புகழ்பெற்ற மத நூல்கள்



சீக்கிய மதத்தை நிறுவிய குருநானக் இவ்வாறு போதித்தார்.

"நீ ஆசி கூறியவரை நான் ஆசீர் வதிக்கிறேன். உன் கருணைக்குப் பாத்திரமானவர் என் கருணைக்கும் பாத்திரமானவன். நானே பரம் பொருள். நானே யாவரையும் படைத்த வன். நீ குரு" எனக் கடவுள் நானக்கை ஆசீர்வதித்தார்.

குருநானத்தின் அறிவுரைகளை குரு அங்கத், குரு அமர்தாஸ், குரு ராம் தாஸ் என்ற அவரது சீடர்கள் பிரசாரம் செய்தார்கள். அவர்களுக்குப் பின் வந்த குரு அர்ஜுன் (1563–1606) தனக்கு முந்தைய குருமார்களின் அறிவுரை களை ஒன்று திரட்டி தன் அறிவுரை களையும் சேர்த்து ஒரு தொகுப்பைத்

## ஆதிகிரந்த்

கடவுள் ஒருவரே.  
அவரே அழியா உண்மை  
அவரே படைப்பவர்  
பயம், வெறுப்பு இல்லாதவர்  
எவ்வுயிரிலும் இருப்பவர்  
உலகமெங்கும் உள்ளவர்  
பிறப்பு, இறப்பு இல்லாத அவரை  
கருணையுடன் வழிபடுங்கள்!  
காலத்திற்கு முன்பே  
உண்மை உள்ளது!  
காலம் இயங்கத்  
தொடங்கியதிலிருந்து  
அவரே உண்மை  
இப்போதும் அவரே உண்மை  
எப்போதும் உண்மையே நிரந்திரம்.



தயாரித்தார். அதுதான் சீக்கியர்களின் முதலாவது மத நூலான 'ஆதிகிரந்த்'. இந்நூலை அமிர்த்சர் ஆலயத்தில் 1604ல் வைத்தார்கள். 'கிரந்த் சாஹறப்' எனப்படும் இந்நூலில் முக்கிய மத குருமார்களின் அறிவுரைகள் மட்டுமே யல்லாமல் ஹிந்து, ஜைன மத அத்யாத்மீக நல்லுரைகளும் இடம் பெற்றுள் ளன. இவற்றிலுள்ள கீர்த்தனைகள் பக்தி ரசமானவை. அவற்றில் உயர்ந்த தத்துவங்களும் கொள்கைகளும் பொதிந்துள்ளன. ஆயினும் அவை யாவரும் புரிந்து கொள்ளும் விதத்தில் எளிய மொழியில் உள்ளன.

சீக்கிய மதம் 15வது நூற்றாண்டில் நம் நாட்டின் பல்வேறு மதங்களின் ஆதாரத்தில் தோன்றியதால் பல மதங்களின் அறிவுரைகள் அதில் உள்ளன. சீக்கியர்கள் மட்டுமல்லாமல் வட இந்தியாவில் பல ஹிந்துக்களும் 'கிரந்த சாஹிப்'பை புனித நூலாகக் கருதி மனனம் செய்து வருகிறார்கள்.

(ஆதாரம் : குஷ்வந்த் சிங்கின் 'சீக்கியர் வரலாறு')

சிஷ்யன் என்ற சொல்லிலிருந்து சீக்கியர் என்ற சொல் ஏற்பட்டது. சீக்கிய மதத்தைப் பத்து குருமார்களுடையதும் அவர்களது சீடர்களுடையதுமான மதம் எனலாம். சீக்கியர் என்றால் குருவுக்காக அவர் தம் வாழ்க்கையையே அர்ப்பணிக்கத் தயாராக இருப்பவர் என்று பொருளாம்.

பத்து குருமார்கள் : குருநானக் (1469–1539) குரு அங்கத் (1504–1552) குரு அமர்தாஸ் (1479–1574) குரு ராம்தாஸ் (1534–1581) குரு அர்ஜுன்தேவ் (1563–1606) குரு ஹர்கோவிந்த் (1595–1644) குரு ஹரிராய் (1630–1661) குரு ஹரிகிருஷ்ண் (1656–1664) குருதேக் பஹாதூர் (1621–1674) குரு கோவிந்த் சிங் (1666–1708) குரு என்ற அடைமொழி இந்தப் பத்து பேர்களுக்கே.

உலகின் படைப்பு பற்றி குருநானக் கூறியதாவது :

'தன் வாக்கால் தூண்கள் இல்லாமல் சொர்க்கத்தை அமைத்தான்.

சூரிய, சந்திரர்களைப் படைத்துத் தன் ஒளியை அவற்றில் புகுத்தினான்.

அவனுக்குத் தாய், தந்தை இல்லை. அவனைப் பிறப்பித்தவர் யார்?

அவனுக்கு எவ்வித உருவும் இல்லை. ஜாதி வித்தியாசம் கிடையாது'

கடவுள் பஞ்ச பூதங்களிலிருந்து உலகைச் சிருஷ்டித்தார் என்று நானக் கூறுகிறார். முடிவில்லாத உலகமே கடவுளின் அற்புத சிருஷ்டி. இதுவே அவரது அபார சக்திக்கு அத்தாட்சி.

# உங்களுக்குத் தெரியுமா?

1. விஜய நகர சாம்ராஜ்யத்தை நிறுவியவர்கள் யார்?
2. தான் வசித்த ஊர் தன் பெயரில் இருக்க வேண்டுமென விரும்பிய பிரபல எழுத்தாளர் யார்?
3. நம் நாட்டில் ஹிந்தி மொழிக்கு அடுத்தபடியாக வேறு எந்த மொழிகள் அதிகப்படியான மக்களால் பேசப்படுகின்றன?
4. வெகுதூரம் கடலில் நீந்திய விளையாட்டு வீரர் யார்? எப்போது? எங்கு இச்சாதனை?
5. பழைய சமஸ்கிருத இலக்கண ஆசிரியர் யார்? அவர் எழுதிய நூலின் பெயர் என்ன?
6. சைகிளைக் கண்டுபிடித்தவர் யார்? எப்போது கண்டுபிடித்தார்?
7. 'டெக்கான் ராணி' என்று எந்த நகரத்திற்கு பெயர்?
8. இன்றைய 'சிங்கப்பூர்' நாட்டை யார் உருவாக்கினார்? எப்போது?
9. 'பாம்பே டக்'கின் சிறப்பு என்ன?
10. ஜப்பான் நாடாளும் மன்றத்தின் பெயர் என்ன?
11. வெலே 20வது நூற்றாண்டின் பெயர் பெற்ற கால்பந்து ஆட்டக்காரர். அவரது சாதனை என்ன?
12. பூமியின் பரப்பளவு எவ்வளவு?
13. மிகவும் அதிக எடையுள்ள பெண்மணி யார்? அவரது நிறை என்ன?
14. உலகில் மிக அதிக எரிமலைகளுள்ள நாடு எது?
15. இங்கிலீஷ் கால்வாயை ஒரு இந்தியச் சிறுவன் நீந்திக் கடந்தான். நான்கு கால்வாய்களை ஒரு சிறுவன் ஐந்து வாரங்களில் நீந்தினான். அவன் யார்?
16. 'உதய சூரிய நாடு' என்று பெயர் பெற்ற நாடு எது?
17. நீர் அடி மட்டத்தில் மிக வேகமாக ஓடும் பிராணி எது?

## விடைகள்

1. ஹரிஹரர், புக்கர் எனும் சகோதரர்கள்.
2. பிரஞ்சு எழுத்தாளர் விக்டர் ஹ்யூகோ.
3. தெலுங்கு, தமிழ், மராட்டி, வங்காளி.
4. அமெரிக்காவின் பென்சன் ஹக்கார்ட். 1975ல்.
5. பாணினி (கி.மு. 4வது நூற்றாண்டு) அஷ்டாத்யாய.
6. கிர்க்பாட்ரிக் மாக்கிலஸ், 1939ல்.
7. புனே.
8. சர். ஸ்ட்ராபோர்டு ராபில்ஸ், 1819ல்.
9. அது பறவை பெயரல்ல, ஒரு மிருகத்தின் பெயர்.
10. டயட்.
11. பிரெஸிலைச் சேர்ந்த இந்த விளையாட்டு வீரர் 1956–74க்குள் 1254 ஆட்டங்களில் கலந்து கொண்டு 1216 கோல்கள் போட்டார்.
12. 510,100,500 சதுர கி.மீ.
13. அமெரிக்காவின் பெர்ஸ்பேர்ல் 399 கி.
14. இந்தோனேஷியா.
15. அமெரிக்காவின் ப்ளாரன்ஸ் சாட்விக்.
16. ஜப்பான்.
17. நீர்யானை.



# குறையே குறி!

கலாதரர் என்ற பண்டிதரைப் பாராட்டி ஜமீன்தாரர் அவருக்குப் பத்து ஏக்கர் நிலம் கொடுத்தார். பண்டிதர் குப்பன் என்பவனைக் கொண்டு அதை உழுது பயிரிட ஏற் பாடு செய்தார். குப்பனும் மிகப் பெரிய பண்டிதரின் நிலமாயிற்றே என்று அவர்பால் கொண்ட மதிப் பால் நன்கு உழைத்து நல்ல விளைச் சலைக் காட்டி வந்தான்.

பண்டிதரோ எப்போதும் குப்ப னிடம் அவனைப் பற்றி ஏதாவது ஒரு குறையைச் சொல்லிக் கொண்டே இருப்பார். வேலை செய்தால் மட்டும் போதாது. அதில் மூளையை உபயோ கிக்க வேண்டும் என்பார். நன்கு துவைத்த ஆடைகளை அணி என் பார். அழுக்குப் போகக் குளி என் பார்.

குப்பனும் பண்டிதருக்கு மரியாதை கொடுத்து அவர் சொல்வதை எல் லாம் பொறுமையாகக் கேட்டுக் கொள்வான். அவர் கூறியபடியெல் லாம் செய்யவும் எண்ணினான். ஆனால் முடியவில்லை. பண்டி தரோ குப்பன் ஒருவேலையை விரை வில் செய்து விட்டால் சற்று நிதான மாகச் செய் என்பார். மெதுவாகச் செய்தாலோ விரைவில் செய் என்று விரட்டுவார்.

பண்டிதர் இப்படியெல்லாம் குறைகூறிக் கொண்டே இருந்தாலும் குப்பன் அதுபற்றிக் கவலைப்பட வில்லை. அவர் படித்தவர். அத னால் தன்னைப் போன்றவர்களுக்கு அவர் அறிவுரை கூறுவது அவரது இயல்புதானே என்று பொறுமையாக சகித்து வந்தான்.

ஒருமுறை ஒரு குண்டாவில் குப் பனைக் கிணற்றிலிருந்து நீர்

-குரு. ரம்யா-

இறைத்து நிரப்பச் சொன்னார். குப்பன் குண்டாவையே கயறில் கட்டி கிணற்றில் விட்டு இழுத்து வைத் தான். அதைக் கண்ட பண்டிதர் "குப்பா! இப்படிக் குண்டாவைக் கட்டி நீர் இறைத்தால் கிணற்றுச் சட்டம் ஒடியும். குண்டாவின் கழுத்து தனியாக வந்து விடும். ராட்டினமும் அறுந்து கிணற்றில் விழுந்து விடும். குடத்தைக் கட்டித்தான் நீர் எடுக்க வேண்டும்" என்றார்.

குப்பனோ "நீங்கள் மூளையை உபயோகிக்கச் சொன்னீர்கள். மணிக் கணக்கில் செய்யும் வேலையை நொடியில் இப்படிச் செய்தேன். இதற்கு முன் கூட பல தடவை இம் மாதிரி நீர் இறைத்திருக்கிறேன். நீங்கள் கூறிய எதுவும் நடக்கவில்லை" என்றான்.

அப்போது அவர் "முன்பு செய்த அனுபவம் என்று சொல்லாதே. ஒரு மலை மீதிருக்கையில் உன்னை ஒரு கொடிய மிருகம் துரத்தினால் நீ கிடுகிடு பள்ளமாயிருந்தாலும் குதித்து உயிர்தப்பி விடுவாயல்லவா? அப்படி குதித்த அனுபவத்தை நினைத்துக் கொண்டு சாதாரண நிலையில் மலை மீதிருந்து நீ குதித்தால் உன் எலும்பெல்லாம் நொறுங்கி இறந்து போவாய். நீ அதிகம் படித்தவன் இல்லை. அதனால் நான் சொல்வதைக் கேட்டு நட" என்றார்.

ஒருநாள் பண்டிதர் குப்பன் சுத்த



மாக இல்லை என்றார். எனவே அவன் உடனே ஓடிப் போய் குளித்து விட்டு சலவை செய்த ஆடை களை அணிந்து வாசனை திரவியங் களைப் பூசிக்கொண்டு அவர் முன் வந்து நின்றான். அதைக் கண்ட பண்டிதர் "என்னடா இது? நீ வேலை செய்ய வந்தாயா அல்லது கல்யா ணம் செய்து கொள்ளப் பெண் பார்க்கப் போகிறாயா?" என்று கேட் டார்.

குப்பனும் "நீங்கள்தானே நான் சுத்தமாக இல்லை என்று சற்று முன் கோபித்துக் கொண்டீர்கள். அதற்காகத்தான் குளித்துவிட்டு நல்ல ஆடைகளை அணிந்து வந்தேன்" என்றான்.

பண்டிதரும் "இப்படி சலவைத் துணிகளை அணிந்து கொண்டு நீ வந்து விட்டால் நான் உன்னை ஒரு வேலையும் செய்யச் சொல்ல மாட் டேன் என்றா நினைக்கிறாய்? ஒரு வேளை உனக்கு இங்கே வேலை செய்ய இஷ்டம் இல்லையோ? அப் படியானால் நீ இன்று முதல் வேலையே செய்ய வேண்டாம். போய் விடு. நானே வயல் வேலைகளை எல்லாம் பார்த்துக் கொள்கிறேன்" என்று கோபமாகக் கூறினார்.

குப்பன் உடனே தன் வீட்டிற்கு ஓடித் தான் அணிந்திருந்த சலவைத் துணிகளைக் களைந்து விட்டு அழுக் கான துணிகளை அணிந்து கொண்டு வந்து பண்டிதர் சொன்ன வேலை





களையெல்லாம் செய்தான்.

குப்பன் யார் கடுஞ் சொற்களைக் கூறினாலும் பொறுத்துக் கொள்ப வனே. ஆனால் வீண் பழி சுமத்தி னால் அதை அவன் எதிர்ப்பான். குப்பனுக்குக் கண்ணன் என்ற மகன் இருந்தான். அவன் புத்திசாலி. தன் தகப்பனைப் போல விவசாயத்தில் ஈடுபடாமல் சிறு வயது முதலே அவன் படிப்பில் கவனம் செலுத்தி வந்தான்.

தன் மகனைக் கலாதரரிடம் சீட னாக அமர்த்த வேண்டும் எனக் குப்பன் விரும்பினான். ஆனால் கண்ணனோ மற்ற பண்டிதர்களிடம் கல்வி கற்றானேயல்லாது கலாதரரி டம் போகவே இல்லை. இதைக் கண்ட குப்பன் தன் மகனிடம் "நீ கலாதரரிடம் போய்ப் பாடம் கேள். அவர் மகா வித்வான்" என்று சொல் லிப் பார்த்தான். ஆனால் கண்ணன் கேட்கவில்லை. இதுபற்றிக் குப்பன் கலாதரரிடம் கூறவே கலாதரர் கண்ணனைப் பார்த்து "நீ நல்ல புத்திசாலி. என் சீடனாகி எல்லாம் கற்றுக் கொள்" என்று ஒருமுறை கூறினார்.

ஆனால் அவனோ "ஐயா! நீங்கள் பெரும் பண்டிதர். நான் தக்க சம யம் பார்த்து தங்கள் சீடனாவேன்" என்றான். மறுபடியும் அவன் கலா தரரைச் சந்தித்த போதெல்லாம் அவரைப் புகழ்ந்து முன் கூறிய தையே கூறி வந்தான்.

அதைக் கேட்ட போதெல்லாம் பண்டிதர் ஒரேயடியாக மகிழ்ந்து போனார். அவர் குப்பனிடமும் அவ னைப் பற்றி புகழ்ந்து "உன் மகனுக் குப் படிப்பு மிக நன்றாக வரும். ஆனால் இன்னமும் யாருக்கு எப்படி மரியாதை செய்ய வேண்டும் என் பது தெரியவில்லை. என்னைப் பார்க் கும் போதெல்லாம் வணங்குவதே இல்லை" என்றார்.

அப்போது குப்பன் "நீங்கள் பெரி யவர். இதையெல்லாம் நீங்கள்தாம் அவனுக்கு எடுத்துச் சொல்ல வேண் டும்" என்றான். அப்போது பண்டிதர் "படித்தவர்கள் ஒருவனிடம் எனக்கு நமஸ்காரம் செய் என்று சொல்ல

மாட்டார்கள். நான் பலமுறை அவனுக்குப் பெரியவர்களை வணங்க வேண்டும் என்று கூறினேன். அவனும் அது சரியே என்று சொன்னாலும் என்னை மட்டும் வணங்கவில்லை" என்று குறைபட்டுக் கொண்டார்.

குப்பன் அன்றிரவு தன் மகனிடம் "நீ ஏன் நம் பண்டிதரை வணங்குவதில்லை?" என்று கேட்டான். கண்ணன் சிரித்தவாறே "இப்படி நான் செய்யவில்லை என்று அவர் உன் போன்றவர்களிடம்தான் கூறுவார். என்னிடம் சொல்லமாட்டார். ஏனென்றால் நான் படித்தவன். அவரை புகழ்கிறவன்" என்றான்.

குப்பன் "நீ அவரை வணங்காமல் போவது தவறு" என்றான். எனவே கண்ணன் "தவறுதான். ஆனால் நான் இந்த ஒரு தவறு செய்வதால் அவர் என் மற்ற தவறுகளைக் கண்டு கொள்வதில்லை. அவர் எதிலும் குறை காண்பவர். அதனால் அவர் என் படிப்பு சம்பந்தமாய் தவறுகளைக் கண்டு உங்களிடம் தினமும் சொல்வாரே என்பதற்காகத்தான் அவரது சீடனாகப் போகவில்லை. ஒரு ஆசிரியர் படிப்பவனுக்கு ஊக்கமளிக்க, வேண்டும். எதற்கெடுத்தாலும் குற்றம் குறை சொல்லக் கூடாது. கலாதரர் மனப்போக்கே அலாதி. அவர் ஒருவனைப் பார்த்து ஏதாவது ஒரு குறை கூறிக் கொண்டே இருப்பார். இப்படி அவர் உங்கள் விஷயத்தில் செய்வதை நான் கவனித்து வருகிறேன். நான் அவரைப் புகழ்வதே தவறுதான். ஆனாலும் நான் என் இந்த ஒரு தப்பில் அவரது கவனத்தை ஈர்த்து என் மற்ற குறைகளைப் பற்றி அவரைப் பேச விடாமல் செய்து வருகிறேன்" என்றான்.

குப்பன் தன் மகன் கூறியது சரியே என் ஏற்று எதிலும் குற்றம் சொல்பவர் மரியாதைக்குகந்தவர் அல்ல எனத் தன் மகன் கூறியதை பாராட்டினான்.





# இதுவா லாபம்!

நரசிம்மன் தன் வயலைச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்து கொண்டிருந்த போது வழியில் குதிரை வண்டியில் தன் நண்பன் கோவிந்தன் வருவதைக் கண்டான். உடனே வண்டியை நிறுத்தி "கோவிந்தா! உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். சொன்னபடி வந்து விட்டாயே" என்றான். கோவிந்தனும் "ஆமாம் நரசிம்மன்! ஒருவன் சொன்ன சொல்லைக் காப்பாற்றியே ஆக வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அவன் மனிதனே அல்ல" எனவே நரசிம்மன் வண்டியில் ஏறிக் கொண்டான். கோவிந்தனும் ஒரு பையை எடுத்து அவனிடம் கொடுத்தவாறே "என்ன நரசிம்மம்! அப்படிக் கோபித்துக் கொண்டு கடிதம் எழுதி விட்டாய். இதில் உன் நகைகளெல்லாம் இருக்கின்றன. சரிபார்த்துக் கொள்" என்றான்.

நரசிம்மனும் 'உம்'மென்று உறுமியவாறே அதை வாங்கிப் பார்த்துவிட்டு அதை தன்னருகே வைத்துக் கொண்டு "எல்லாம் சரியாக இருக்கிறது" என்றான். கோவிந்தன் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டான். ஏனெனில் நரசிம்மன் முன்கோபி. பார்க்கவே பயங்கரமாக இருப்பான். அந்த வட்டாரத்திலேயே பெரும்புள்ளி. அவனது முன் கோபம் அப்பகுதியில் யாவரும் அறிந்ததே.

வண்டிக்காரன் வண்டியை நரசிம்மனின் வீட்டின் முன் நிறுத்தினான். வண்டியிலிருந்து கோவிந்தனும் நரசிம்மனும் இறங்கினர். அப்போது கோவிந்தன் ஐந்து ரூபாயை எடுத்து வண்டிக்காரனிடம் கொடுத்து "இந்தாப்பா! பேசினபடி வண்டிக்கான வாடகை ஐந்து ரூபாய்" என்றான்.

வண்டிக்காரன் அதைக் கைநீட்டி வாங்கும் போது நரசிம்மன் அதைப்

-சுவா. வெங்கடராமன்-

பிடுங்கிக் கொண்டு "என்னடா இது அநியாயம்! ரயிலடியிலிருந்து இங்கே வர வழக்கமாக எல்லோரும் கொடுப்பது இரண்டு ரூபாய்தானே. இவர் ஊருக்குப் புதியவர் என்று தெரிந்து ஐந்து ரூபாயா வாங்குகிறாய்? உனக்கு இரண்டு ரூபாய்க்கு மேல் ஒரு பைசாக் கூடக் கிடைக்காது" எனக் கூறி இரண்டு ரூபாய்களை அவன் முன் எறிந்து விட்டு மூன்று ரூபாய்களை கோவிந்தனிடம் கொடுத்தான்.

அதுகண்டு கோவிந்தன் திகைத்தான். ஏதாவது பேசினால் நரசிம்மன் தன்னைப் பேசவிடாமல் அடக்கி விடுவான் என்பதை அவன் நன்கு அறிவான். அதனால் அவன் எதுவும் கூறாமல் நின்றான்.

வண்டிக்காரன் தயங்கியவாறே "இவர்தான் ஐந்து ரூபாய் வாடகை தருவதாக ஒப்புக் கொண்டார்" என்றான். எனவே நரசிம்மன் கோபத்தோடு "நீ பேசாமல் போகப் போகிறாயா அல்லது உன்னையும் உன் குதிரையையும் துரத்த என் வேட்டை நாயை அவிழ்த்து விடட்டுமா? வழக்கமாகக் கொடுக்கப்படும் வண்டி வாடகை இரண்டு ரூபாய்தானே. நீ எப்படி இவரிடம் ஐந்து ரூபாய் கேட்கலாம்?" என்று உறுமினான். வண்டிக்காரன் பயந்து வண்டியை வேகமாக ஓட்டிக் கொண்டு போய் விட்டான். நரசிம்மன் விட்டெறிந்த இரண்டு ரூபாய்களைக் கூட அவன் எடுத்துக் கொள்ளத் துணிவு கொள்ளவில்லை.

அப்போது கோவிந்தன் "நர



சிம்மா! ஆனாலும் உனக்கு இப்படி முன் கோபம் வரக்கூடாது. பாவம்! அந்த வண்டிக்காரன் நீ எறிந்த இரண்டு ரூபாய்களைக் கூட எடுத்துக் கொள்ள தைரியமில்லாமல் பயந்து ஓடிவிட்டானே!" என்றான்.

நரசிம்மனும் "போகட்டுமே. அதனால் நமக்குத்தான் லாபம். நான் கோபித்துக் கொண்டதால் முதலில் உனக்கு மூன்று ரூபாய் லாபம். இப்போது இந்த இரண்டு ரூபாய் வேறு. என் முன் கோபத்தால் கிடைத்த லாபத்தைப் பார்த்தாயா? இந்த மாதிரி நான் என் வேலைக்காரர்களையும், குத்தகைதாரர்களையும் கோபித்துக் கொள்கிறேன். அதனால் நான் கொடுத்த கூலியை வாங்கிக் கொள்கிறார்கள். நான் கேட்கும் குத்தகைப் பணத்தைக் கொடுக்கிறார்கள். அவர்கள் என்னை எதிர்த்து ஒரு வார்த்தை கூடப் பேச முயல்வதில்லை. இப்படி நான் கோபித்துக் கொள்வதால் எனக்குதான் லாபம். நஷ்டம் எதுவும் இல்லை. அதற்காக சில சமயங்களில் எனக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது போல நடிப்பதும் உண்டு. இத்தகைய கோபத்தால் எனக்கு லாபம்தான் ஏற்படுகிறதேயல்லாது நஷ்டமே இல்லை பார்" என்று பெருமை அடித்துக் கொண்டான்.

கோவிந்தனும் "ரொம்ப அழகாய்த்தான் இருக்கிறது உன் லாபம். இது எந்த விபரீதத்தில் கொண்டு போய் விடுமோ யார் கண்டது. எதற்கும் நீ உன் கோபத்தை அடக்கிக் கொள்ள முயற்சி செய். ஆமாம். நான் கொடுத்த பை எங்கே? கோபத்தில் பையை வண்டியிலேயே விட்டு விட்டாயா?" என்று கேட்டான்.

நரசிம்மனும் "ஐயோ! நீ கொடுத்த பையை வண்டியிலிருந்து எடுத்துக் கொள்ள மறந்து விட்டேனே! போய் விட்டதே. பத்தாயிரம் ரூபாய்! அந்த வண்டிக்காரனைக் கூடத் தெரியாதே" எனக் கூறித் தலையில் கை வைத்துக் கொண்டு இடிந்து போய் விட்டான்.






பீஷ்மர் சொன்னதைக் கேட்டு சத்தியவதி வெட்கத்தோடு தலைகுனிந்து கொண்டாள். அதுபற்றி யோசிக்கலானாள். அரச வம்சத்தில் குழந்தையே பிறக்காது போனால் அந்த வம்சத்திற்கும் நாட்டிற்கும் எப்படிப்பட்ட நஷ்டம் ஏற்படும் என்பதை பீஷ்மர் உணர்த்தியது அவள் மனதில் நன்கு பதிந்தது. தான் படகோட்டிய நாட்களில் பராசரருக்கும் தனக்கும் பிறந்த கிருஷ்ணத்வைபாயனர் என்ற வியாசரை அவள் நினைத்துக் கொண்டாள். பீஷ்மரிடம் அவள் அச்சம்பவத்தைக் கூறி "வியாசர் வேதங்களை வகுத்தவர். உத்தம ஞானி. அவர் வாயிலாக வம்சத்தைத் தழைக்கச் செய்யலாம்" என்றாள்.

பீஷ்மரும் அவள் கூறியதே சரியென ஏற்றார். சத்தியவதி வியாசரை வரவழைத்து தன் எண்ணத்தைக் கூறினாள். வியாசரும் வம்ச அபிவிருத்திக்காக அவ்வாறு செய்வது உசிதமே என்று கூறினார்.

சத்தியவதி அம்பிகையிடம் வம்சம் தழைக்க வேண்டிய அவசியத்தைக் கூறி அன்றிரவு அவளை அவளது பெரிய அத்தான் சந்திக்க வருவார் என்று கூறினாள். இரவில் பீஷ்மர் தான் வரப் போகிறார் என்று எதிர்பார்த்த அம்பிகை அறைக்குள் தாடியும் மீசையும் சடைமுடியும் கொண்ட வியாசரைக் கண்டு அவள் கண்களை மூடிக் கொண்டாள். அவள் வியாசரை அதற்குமுன் பார்த்தது இல்லை.

-கௌரவர்கள் பிறப்பு-



தாலே அவளுக்கு பயம் ஏற்பட்டது. அதனால் இரவில் அவள் தனக்கு பதிலாகத் தன் வேலைக்காரியைத் தன் படுக்கை அறையில் முக்காடிட்டு இருக்கச் செய்தாள். வியாசர் அவளை அம்பிகை என்றே நினைத்து விட்டார். அவருக்கும் அந்த வேலைக்காரிக்கும் பிறந்தவர்தான் சிறந்த அறிவாளியான விதுரன்.

இவ்வாறு பிறந்த திருதராஷ்டிரனும் பாண்டுவும் விதுரனும் அரண்மனையில் வளர்ந்து பெரியவர்களானார்கள். பீஷ்மர் ஆட்சிப் பொறுப்பை ஏற்று மக்கள் சுகமுடன் வாழ ஆட்சி புரிந்தார். பீஷ்மர் அம்மூவருக்கும் போர்கலைகளையும், சாஸ்திரங்களையும் கற்றுத் தர ஏற்பாடு செய்தார்.

திருதராஷ்டிரன் உடல் பலம் பெற்றவன். பாண்டு வில் வித்தையில் கை தேர்ந்தவன். விதுரன் தர்ம சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவன். இவர்களில் ஒருவனை மன்னனாக்க வேண்டும். பீஷ்மர் பாண்டுவைத் தேர்ந்தெடுத்து மன்னனாக்கினார். ஏனெனில் திருதராஷ்டிரன் பிறவிக் குருடன். விதுரன் க்ஷத்தியப் பெண்ணுக்குப் பிறந்தவனல்ல.

பீஷ்மர் வாலிபர்களான அம்மூவருக்கும் திருமணம் செய்ய நிச்சயித்தார். காந்தார மன்னன் சுலபனின் புதல்வி காந்தாரி. அவள் தனக்கு நூறு குழந்தைகள் பிறக்க வேண்டுமென்று சிவபிரானிடம் வரம் பெற்றிருந்தாள். பீஷ்மர் சில பிராம்மணர்

அவள் இறுகக் கண்களை மூடிக் கொண்டதால் அவளுக்குப் பிறந்த திருதராஷ்டிரன் குருடனாகவே பிறந்தான்.

இதைக் கண்ட சத்தியவதி மன முடைந்து போனாள். மீண்டும் அவள் வியாசரை வரவழைத்து அம்பாலிகையைச் சந்திக்க ஏற்பாடு செய்தாள். வியாசரைக் கண்டதும் அம்பாலிகையின் உடல் நடுங்கியது. முகம் வெளுத்தது. இதனால் அவளுக்கு வெள்ளை நிறத்தில் பாண்டு பிறந்தான். இதனாலும் சத்தியவதி அதிருப்தி அடைந்தாள்.

அவள் அம்பிகையிடம் மறுபடியும் அவளைச் சந்திக்க வியாசர் வருவார் எனக் கூறினாள். வியாசரை நினைத்

களை காந்தார மன்னனிடம் தூத னுப்பி காந்தாரியை திருதராஷ்டிர னுக்கு மணம் செய்து கொள்வதாகச் சொல்லச் சொன்னார்.

திருதராஷ்டிரன் பிறவிக் குருடன் என்று தெரிந்தும் கூட அந்த வம்சம் உயர்ந்தது என் எண்ணி காந்தார மன்னன் அந்த சம்மந்தத்திற்கு ஒப்புக் கொண்டான். தன் கணவன் குருடன் என்பதால் காந்தாரி தன் கண்களை யும் துணியால் கட்டிக் கொண்டு பார்வையற்றவள் போல இருந்தாள். அவளது அண்ணன் சகுனி அவளை ஹஸ்தினாபுரத்தில் கொண்டு போய் அவளது கணவன் வீட்டில் விட்டு விட்டு பீஷ்மர் அளித்த மரியாதைகளை ஏற்றுக் கொண்டு காந்தாரத்திற்கு திரும்பிச் சென்றான்.

பீஷ்மர் குந்தியைப் பற்றிக் கேள்விப் பட்டு அவளைப் பாண்டுவுக்கு மண முடித்து வைக்கத் தீர்மானித்தார். குந்தி யாதவ குலத்தவள். வசுதேவ ரின் தந்தையான சூரனுக்கு விருதை என்ற மகள் இருந்தாள். சூரனின் அத்தை மகன் குந்திபோஜன். அவ னுக்குக் குழந்தையே இல்லாததால் விருதையைத் தன் மகள் போலக் கருதி வளர்த்து வந்தான்.

குந்திபோஜனின் வீட்டிற்கு வருப வர்களை எல்லாம் விருதை உபச ரித்து வந்தாள். ஒருமுறை துர்வாசர் குந்திபோஜனின் வீட்டிற்கு வந்து விருதை செய்த உபசாரங்களால் மகிழ்ந்து போனார். அவர் ஒரு மந் திரத்தை அவளுக்கு உபதேசித்து "பெண்ணே! நீ இந்த மந்திரத்தை





எந்த தேவனை நினைத்தக் கொண்டு உச்சரிக்கிறாயோ அந்த தேவன் உன் முன் தோன்றி உனக்கு ஒரு சிறந்த மகனை அளிப்பான்" எனக் கூறிவிட்டுச் சென்றார்.

முனிவர் கூறியதை உடனேயே பரீட்சிக்க அவள் சூரியதேவனை நினைத்துக் கொண்டு அந்த மந்திரத்தை உச்சரித்தாள். மறுநிமிடமே சூரியதேவன் அவள் முன் தோன்றி அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்க அருள் செய்தான். மணமாகாத தான் ஒரு குழந்தையைப் பெற்றதால் உலகம் தன்னை ஏசும் என விருதை பயந்தாள். அதனால் கவச குண்டலங்களோடு பிறந்த அக் குழந்தையை அவள் ஒரு பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டு விட்டாள்.

அப்பெட்டி ஒரு தேரோட்டிக்குக் கிடைத்தது. அவன் அதைக் கண்டு மகிழ்ந்து போனான். ஏனெனில் அவன் மனைவிக்கு ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. அதனால் கவச குண்டலங்களோடு இருந்த அக் குழந்தையைத் தன் வீட்டிற்கு எடுத்துச் சென்றான். அவன் அந்த அழகிய குழந்தையைத் தன் மனைவியான ராதையிடம் கொடுத்தான். அக் குழந்தையை அருமை பெருமையுடன் வளர்த்து வந்தான். காதில் குண்டலங்களுடன் பிறந்தக் காரணத்தால் அவனுக்குக் கர்ணன் என்றும், ராதை வளர்த்ததால் ராதேயன் என்றும் பெயர் ஏற்பட்டது.

இதற்குப் பின்தான் குந்திபோஜன் தான் வளர்த்து வந்த விருதை என்ற குந்திக்கு சுயம்வரம் நடத்தினான். அதற்கு பாண்டு செல்லவே குந்தி அவன் கழுத்தில் மாலையிட்டு அவனை மணந்து கொண்டாள். பாண்டு அவளோடு ஹஸ்தினாபுரத்திற்கு வந்து தன் மாளிகையில் சுகமாகக் காலம் கழிக்கலானான்.

பீஷ்மர் பாண்டுவுக்கு மத்திர தேச மன்னன் சல்லியனின் தங்கை மாத்ரியையும் மணம் செய்து வைத்தார். அதற்காக அவர் மத்திர தேச மன்னனுக்கு பரிசாக நிறையப் பணமும் விலையுயர்ந்த பொருள்களும் கொடுக்க வேண்டியதாயிற்று. சல்லியன் அது தன் வம்ச வழக்கம்



கரமாக முடிந்தது பற்றி ஹஸ்தினா புரத்தில் யாவரும் மகிழ்ச்சி அடைந்த னர். பீஷ்மர் அதுபற்றிப் பெருமிதம் கொண்டார். சத்தியவதி, திருதராஷ்டி ரன், விதுரன் முதலானோரும் மட் டற்ற மகிழ்ச்சி அடைந்தார்கள்.

பீஷ்மர் முதலானோர் சென்று அவனை எதிர்கொண்டு வரவேற்ற னர். பாண்டுவும் தான் கொண்டு வந்த பொருள்களை எல்லாம் பீஷ்ம ருக்கும், சத்தியவதிக்கும், விதுரருக் கும், தன் தாயார்களுக்கும் கொடுத் தான். அதனால் யாவரும் மகிழ்ச்சி அடைந்தனர். திருதராஷ்டிரன் அப் பொருள்களைக் கொண்டு பல அஸ்வமேத யாகங்களையும் செய் தான்.

இதன்பின் பாண்டு தன் இரு மனைவிகளுடன் இமயமலைப் பகுதி யில் உல்லாசப் பயணமாகச் சென் றான். அவர்களுக்குத் தேவைப்படும் பொருள்களையும் திருதராஷ்டிரன் அவ்வப்போது அனுப்பி வந்தான்.

பீஷ்மர் விதுரனுக்கு தேவகன் என்ற மன்னனின் புதல்வியை மணம் செய்து வைத்தார். ஒருநாள் திருத ராஷ்டிரனின் மனைக்கு வியாசர் மிகுந்த பசியுடன் வந்தார். காந்தாரி அவரை வரவேற்று உபசரித்து உண வும் அளித்தாள். வியாசரும் அவள் விரும்பும் வரத்தைக் கேட்கலாம் என்று கூறினார். அவளும் தன் கணவனுக்குச் சமமாக இருக்கும் நூறு புதல்வர்கள் தனக்குப் பிறக்க

என்றதால் பீஷ்மர் அதை மதித்துப் பணிந்தார். மாத்ரியும் ஹஸ் தினாபுரத்திற்கு வந்தாள். பாண்டு தன் இரு மனைவிகளுடன் சுக வாழ்வு வாழ்ந்து வரலானான்.

ஓரிரண்டு மாதங்களுக்குப் பின் பாண்டுவுக்கு திக் விஜயம் செய்ய வேண்டுமென்று ஆசை ஏற்பட்டது. அவன் ரத, கஜ, துரக, பதாதி எனப் படும் நாற்படைகளுடன் திக் விஜயம் செய்ய பீஷ்மரின் ஆசி பெற்று கிளம் பினான். தசார்ணவம், மகதம், காசி, பௌண்டபுரம் முதலிய நாடுகளை வென்று அந்த அரசர்கள் கொடுத்த விலையுயர்ந்த பல பொருள்களுடன் ஹஸ்தினாபுரத்திற்குத் திரும்பினான்.

பாண்டுவின் திக் விஜயம் வெற்றி

வரம் தருமாறு வேண்டினாள். இதற்குச் சிறிது காலத்திற்குப் பின் அவள் கர்ப்பமுற்றாள். அவள் இரண்டாண்டு காலத்திற்குத் தன் கர்ப்பத்தைச் சுமந்தாள். இதற்குள் குந்திக்கு யுதிஷ்டிரன் பிறந்தான் என்ற செய்தி கிடைத்தது.

வியாசர் வரமளித்தும் தனக்கு இன்னமும் குழந்தை பிறக்கவில்லையே என்று மனம் குமறிய காந்தாரி தன் கர்ப்பத்தைப் பலமாக இடித்தாள். அதனால் அவளது கர்ப்பத்திலிருந்து ஒரு பெரிய மாமிசத் துண்டம் வெளிவந்தது. அதைத் தூர எறிந்து விட வேண்டுமென அவள் நினைத்தாள்.

திருதராஷ்டிரனைக் காண வந்த வியாசருக்கு இது தெரிந்தது. அவர் காந்தாரியிடம் அதுபற்றிக் கேட்கவே அவளும் "நான் கர்ப்பமுற்று இரண்டு வருடங்களாகியும் எனக்கு குழந்தை பிறக்கவில்லை. ஆனால் குந்தி எனக்கு முன் ஒரு குழந்தையைப் பெற்று விட்டாளே. நீங்கள் கொடுத்த வரம் பலிக்கவில்லையே" என்று கண்ணீர் விட்டுக் கதறினாள்.

வியாசரும் "நான் கொடுத்த வரம் பலிக்கும் நீ கவலைப்படாதே. நீ சிவபிரானிடம் முன்பே வரம் பெற்றிருக்கிறாய். என் வரத்தால் அவர்கள் மிகுந்த பலசாலிகளாக இருப்பார்கள் என்றும் உறுதி செய்து கொண்டாய். எனவே உனக்கு நூறு புதல்வர்கள் இருப்பார்கள். கவலைப்படாதே" என்று கூறி காந்தாரியின் கர்ப்பத்திலிருந்து வெளிவந்த மாமிசத் துண்டத்



தைக் கொண்டு வரச் சொன்னார். அவர் அதை நூறு துண்டுகளாக்கி ஒவ்வொன்றையும் ஒரு நெய்க் குடத்தில் வைக்கலானார். அப்போது காந்தாரி "எனக்கு நூறு புதல்வர்களோடு ஒரு புதல்வியும் வேண்டும்" என்று வேண்டினாள். அதுவும் நடக்கும் எனக்கூறி ஒரு துண்டை எடுத்து இரண்டாக்கி மொத்தம் நூற்றியொன்று குடங்களை வைத்து விட்டுச் சென்றார்.

இதற்கு ஒரு வருடத்திற்குப் பின் ஒவ்வொரு குடத்திலிருந்து ஒரு குழந்தையாக வெளிவரலாயிற்று. முதல் குழந்தை வெளிவந்த போது பல அபசகுனங்கள் ஏற்பட்டன. அது கண்டு திருதராஷ்டிரன் பயந்து போனான். அவன் பீஷ்மர், விதுரன் முதலியவர்களிடம் அந்தக் குழந்தைக்கு அரசாளும் யோகம் இருக்கிறதா என்று கேட்டான்.

அவர்களும் "இவன் பிறந்தபோது அபசகுனங்கள் தோன்றின. அதனால் இவனால் வம்சத்திற்கே அழிவு ஏற்படும் என்று தெரிகிறது. இவனைக் கொன்று விடுங்கள். நூறு புதல்வர்களில் ஒருவன் போவதால் ஒன்றும் குடிமுழுகிப் போகாது" என்றனர். ஆனால் திருதராஷ்டிரன் அதற்கு இணங்கவில்லை.

இப்படி முதலில் பிறந்தவன் துரியோதனன். அதன்பின் துச்சாதனன், துஸ்ஸஹன் முதலிய கௌரவர்களும் துச்சலை என்ற பெண்ணும் பிறந்தனர்.

காந்தாரி கர்ப்பமுற்ற காலத்தில் திருதராஷ்டிரன் தனக்குப் பணிபுரிய ஒரு வைசியப் பெண்ணை வேலைக்கு அமர்த்திக் கொண்டான். துரியோதனன் பிறந்தபோதே அந்தப் பெண்ணிற்கும் திருதராஷ்டிரனுக்கும் யுயுத்சு என்பவன் பிறந்தான்.

திருதராஷ்டிரன் தன் புதல்வர்களுக்குத் தக்க கல்வி புகட்டினான். அவர்கள் பெரியவர்களானதும் தகுந்த பெண்களாகப் பார்த்து அவர்கள் எல்லோருக்கும் விவாகம் செய்து வைத்தான்.





# தானம் செய்யும் முறை

கந்தப்பன் யார் வந்து ஏதாவது கொடுங்கள் என்று கேட்டாலும் தன்னிடம் உள்ளதை உடனே கொடுத்து விடும் இயல்புடையவன். அவன் மனைவியும் அவனது செயலைத் தடுக்காததால் அவனது சொத்து விரைவில் கரைந்து போயிற்று. அதனால் காய்கறி பயிரிட்டு வியாபாரம் செய்ய நினைத்தான். ஆனால் ஊரார் அவனிடம் காசு கொடுக்காமலேயே காய்கறிகளைக் கேட்டு வாங்கிக் கொண்டு போனார்கள்.

காய்கறியை விற்றுப் பணம் சம்பாதிக்க முடியாதது கண்டு கந்தப்பன் நான்கு பையன்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துப் பணம் சம்பாதிக்கலாம் என் நினைத்தான். ஆனால் அதுவும் நடக்கவில்லை. பையன்களின் பெற்றோர்கள் அவன் மிக நன்றாகச் சொல்லிக் கொடுக்கிறான் என்று கூறிக் கொண்டே இருந்தார்களேயொழிய யாருமே பணம் கொடுக்கவில்லை.

அடுத்து கந்தப்பன் காட்டில் விறகு வெட்டி அதை விற்றுப் பணம் சம்பாதிக்க நினைத்தான். காட்டில் போய் விறகு வெட்டி எடுத்து வரும் போது ஒரு ஏழை மனிதன் அவனைக் கண்டு "ஐயா! நான் ஏழை. என்னிடம் பணம் இல்லை. என் மனைவி இறந்து விட்டாள். அவளது உடலை எரிக்க இந்தக் கட்டைகளைக் கொடுங்கள்" என்றான். எனவே கந்தப்பன் தான் வெட்டிய விறகை கொடுத்து விட்டு வீடு திரும்பினான்.

அவனிடமிருந்து விவரம் தெரிந்து கொண்ட அவன் மனைவி "இந்த ஊரில் இருந்தால் உங்களிடமிருந்து எல்லோரும் எதையாவது கேட்டு வாங்கிப் போய் விடுவார்கள். நமக்கு இனிமேல் பணம் கிடைக்காது. சாவு

-சப. வெங்கடேசன்-



பயபக்தியுடன் தன் தந்தையின் படத்தைத் தொட்டான்.

அப்போது வீட்டு வாசலில் ஒரு பிச்சைக்காரன் நின்று "ஐயா! பிச்சை போடுங்கள்" என்று குரல் கொடுத்தான். கந்தப்பன் வீட்டில் என்ன இருக்கிறது என்று தேடிப் பார்த்தான். ஒரு பிடி அரிசிதான் இருந்தது. அதை அப்படியே எடுத்து வந்து தன் மனைவியிடம் கொடுத்து "நம்மிடம் இப்போது உள்ளது இந்த ஒரு பிடி அரிசிதான். நாம் பட்டினி கிடந்தாலும் பரவாயில்லை. இதைக் கொண்டு போய் அந்தப் பிச்சைக்காரனுக்குப் போட்டுவிட்டு வா" என்றான். அவளும் அதை அந்தப் பிச்சைக்காரனுக்குப் போட்டாள்.

தான்" என்று கூறி அலுத்துக் கொண்டாள்.

கந்தப்பனும் "கவலைப்படாதே! மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றாமலா போய் விடுவான். இறக்கும் போது என் தந்தை நான் எவ்வளவு தாழ்ந்து போனாலும் பிறருக்கு இல்லை என்று சொல்லாமல் என்னிடம் இருப்பதைக் கொடுக்க வேண்டுமென்று கூறினார். மேலும் நான் மிகவும் நொடித்துப் போய் விட்டால் இந்த வீட்டிலுள்ள அவரது படத்தைத் தொட்டு வணங்கினால் ஒரு பிச்சைக்காரன் வருவான், எனக்கு நன்மையே ஏற்படும் என்றும் கூறினார். அதனால் கவலை வேண்டாம்" என்று கூறி குளித்து விட்டு வந்து

பிச்சைக்காரனும் "எல்லாவற்றையும் போட்டு விட்டாயே. இந்தா ஒரு அரிசியை வைத்துக் கொள். இது உனக்கு நன்மையைக் கொடுக்கும்" என்று ஒரு அரிசியைக் கொடுக்க அவள் அதை அரிசிப் பாத்திரத்தில் போட்டாள். அன்றிலிருந்து அதில் அரிசி, பருப்பு, உப்பு என்று சமையலுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் கிடைத்து வந்தன.

அதைக் கண்ட தனபாலனும் அவன் மனைவியும் ஆச்சரியப்பட்டார்கள். தம் தான தர்மத்தின் காரணமாக அப்பிச்சைக்காரனின் அபூர்வ சக்தி அவர்களுக்குத் தெரிந்தது.

தமக்கு இப்படி நன்மை செய்த பிச்சைக்காரனை மறுபடியும் காண

கந்தப்பனும் அவன் மனைவியும் விரும்பினர். ஆனால் ஆண்டுகள் கழிந்து கொண்டே இருந்தன. அப் பிச்சைக்காரனைக் காண முடிய வில்லை.

ஒருமுறை கந்தப்பன் தன் உறவி னர் வீட்டுத் திருமணத்திற்குத் தன் மனைவியுடன் சென்றான். அது ஒரு நகரம். திருமணம் முடிந்த தும் பிச்சைக்காரர்களுக்கு அன்னதா னம் செய்யப்பட்டது. அங்கு தான் கண்ட பிச்சைக்காரனைக் கந்தப்ப னின் மனைவி பார்த்து விட்டாள். சாதம் கொடுப்பவனிடம் அவள் அந்த பிச்சைக்காரனைக் காட்டி அவனைத் தன்னிடம் அழைத்து வரும்படிக் கூறினாள். ஆனால் அவன் கூறியும் அந்தப் பிச்சைக்கா ரன் அவ்ளைச் சந்திக்காமலேயே கிளம்பி விட்டான்.



கந்தப்பனும் அவன் மனைவியும் அந்தப் பிச்சைக்காரன் என்ன செய் கிறான் எனக் காண அவனைப் பின் தொடர்ந்தார்கள். பிச்சைக்கார னும் அடுத்து ஒரு கருமியின் வீட் டிற்குப் போக அந்தக் கருமி ஒன்றும் கிடையாது என்று கூறி விரட்டி விட்டான். இதுபோல இரண்டு மூன்று வீடுகளுக்குப் போக, அவர் களும் அந்தப் பிச்சைக்காரனை விரட்டினார்கள்.

கந்தப்பன் அப்பிச்சைக்காரனை அணுகி "ஐயா! உங்களிடம் அபூர்வ சக்தி உள்ளது. அதனால் உங்கள் ஆசி பெற்று நாங்கள் சுகமாக வாழ்கிறோம். நீங்கள் ஏன் இப்படி வீடு வீடாக அலைய வேண்டும்? எங்களோடு இருந்து விடுங்கள்" என்றான்.

அவனோ "உங்கள் வீட்டில் உட் கார்ந்து சாப்பிட்டால் எப்படி? நான்கு வீடுகளுக்குப் போய் 'இல்லை' என்ற வார்த்தையைக் கேட்டாக வேண்டும். எவனொருவன் பொருள்களை வைத் துக் கொண்டு இல்லை என்கிறானோ அந்தப் பொருள்களெல்லாம் அவ னிடமிருந்து போய் உங்கள் வீட்டிற்கு வந்து சேர்ந்து விடும்" என்றான்.

அதுகேட்டு கந்தப்பன் ஆச்சரியப் பட்டு "எங்களுக்காகவா வீடு வீடாக அலைந்து பொருள் சேர்த்துக்

கொடுக்கிறீர்கள்? நீங்கள் யார்? ஏன் இப்படிச் செய்கிறீர்கள்?" என்று கேட்டான். அந்தப் பிச்சைக்காரனும் "நான் உன் தந்தை". எனவே கந்தப்பனும் அவன் மனைவியும் அவனது கால்களில் விழுந்து வணங்கினார்கள்.

அவர்கள் அவனைத் தம்மோடு வந்து விடும்படி வற்புறுத்தவே அவன் "அது முடியாது. நானோ இறந்து போனவன். இறப்பவனுக்கு எவ்வித ஆசையும் இல்லாதிருந்தால் சொர்க்கத்தை அடைவான். ஆசைகளை விடாதவன் பூவுலகில் அலைந்து திரிவான். நீங்கள் சுகப்பட வேண்டுமென்று நான் ஆசைப்படுவதால் உங்கள் வீட்டிலுள்ள என் படத்தில் புகுந்து கொள்கிறேன். தான தர்மம் செய்வது நல்லதுதான். ஆனால் நீங்கள் குடும்ப சொத்தை எல்லாம் தான தர்மத்தில் கொடுத்து விட்டீர்கள். நீங்கள் உங்களுக்கென்று ஏதாவது வைத்துக் கொண்டு தான தர்மம் செய்தாலே எனக்கு மனநிம்மதி. உங்களைப் பற்றிய கவலை இராது. எனவே நீங்கள் அப்படிச் செய்யும் வரை நான் பிச்சைக்காரனின் உருவில் அலைந்து திரிந்து கொண்டே இருக்க வேண்டியது தான்" என்றான்.

அதுகேட்டு கந்தப்பனின் கண்களில் நீர் நிறைந்து விட்டது. அவன் தன் தந்தையிடம் "தான தர்மங்கள் செய்வதால் நான் பிறர் சுகமடைவார்கள் என் இதுவரை எண்ணி இருந்தேன். ஆனால் எனக்காக நீங்கள் கஷ்டப்பட்டு பிச்சை கேட்பது என் மனதை வருத்துகிறது. இனி நானே சம்பாதித்து எனக்கும் வைத்துக் கொண்ட பிறகே தானம் செய்கிறேன்" என்றான்.

கந்தப்பன் தான் கூறியபடி நடந்து யாருக்கு தேவைப்படுமோ அவருக்கே தானம் செய்து வந்தான். தானே சம்பாதித்து செய்யும் தானமே முன்னோர் சேர்த்து வைத்த செல்வத்தைத் தானம் கொடுத்துக் கரைப்பதை விட மேல் என்பதை அவன் புரிந்து கொண்டான்.



## அம்புலிமாமா செய்திகள்

### முதலை ஆசிரியரா?

இயற்கையைப் பற்றி அறிய மலை, ஆறு, மேகம், கடல் ஆகியவற்றையெல்லாம் ஆய்வு செய்கிறார்கள். மலரின் மணத்தை நுகர்கிறார்கள். பறவைகளையும் மிருகங்களையும் கண்டால் அவை நமக்குச் சில படிப்பினைகளையும் அளிக்கின்றன. தாய்லாந்தில் பாமிட்டி என்ற ஊரில் ஒரு பள்ளிக் கூடத்தில் ஆயிரம் மாணவர்



கள் படிக்கிறார்கள். அப்பள்ளியினருகே உள்ள குளத்தில் முதலைகள் இருந்தன. அவற்றால் தம் குழந்தைகளுக்கு ஆபத்து வரும் எனப் பயந்து மாணவர்களின் பெற்றோர்கள் அவற்றை விரட்டி விடும்படிக் கூறினார்கள். ஆனால் அப்பள்ளியின் இயக்குனரோ "அம்முதலைகளால் மாணவர்களுக்கு எவ்வித ஆபத்தும் வராது. இயற்கையின் இரகசியங்களை மாணவர்கள் அறிந்து கொள்ள அவை ஆசிரியர் போல உதவுகின்றன" என்று கூறினாராம்.

### வளர்ப்புப் பிராணிகளின் அன்பு

நாய், கிளி, பூனை போன்றவற்றைச் சிலர் வளர்க்கிறார்கள். நெதர்லாந்தின் தலைநகர் திஹேக்கில் ஒரு இல்லத்தரசி நாய், பூனை, கிளியோடு தேள், பாம்பு, உடும்பு ஆகியவற்றையும் தனித்தனி கூண்டுகளில் வைத்து தன் வீட்டில் வளர்த்து வருகிறாளாம். இது அவளுக்கு மனமகிழ்ச்சியைத் தந்தாலும் அவளது கணவனும் இருகுழந்தைகளும் அவளை விட்டுப் பிரிந்து போகத் தீர்மானித்தனர். அந்தப் பிராணிகள் வளர்ப்பதை அவள் விட்டாலே அவளுடன் தாம் வாழ முடியும் என்று கூறியும் விட்டார்களாம்.

### எஜமானனுக்கே!

கேரளாவில் மைலம்மாடு என்ற ஊரில் பழக்கப்பட்ட யானை ஒன்று பெரிய பெரிய மரங்களைத் தூக்கி இழுத்து வரப் பயன்படுத்தப்பட்டது. இவ்வாறு அது இருபது நாட்கள் வேலை செய்தபின் அதனை யானைப் பாகன் சங்கிலியால் ஒரு மரத்தில் பிணைத்து விட்டுச் சென்றான். அம்மரத்தருகே ஒரு ஆறு ஓடிக் கொண்டிருந்தது. அதில் அன்றிரவு வெள்ளம் வந்து எங்கும் நீர் நிறைந்தது. மரத்தடியே நீர் தேங்கியும் யானை சற்றும் பயப்படவில்லை. நீர்மட்டம் அதிகரித்து யானையின் முக்கால் பகுதிக்கு மேல் வந்து விட்டது. யானை தன் துதிக்கையை உயர்த்தி நின்றதேயொழிய குரல் கொடுக்கவில்லை. அதைக் கண்ட வேறொரு யானைப் பாகன் அதைக் காப்பாற்ற முயன்றான். ஆனால் யானை நகர மறுத்தது. முடிவில் அதன் எஜமானனான யானைப் பாகன் வந்து அதன் துதிக்கையை தடவிய பிறகே அது அந்த இடத்திலிருந்து நகர்ந்தது.





# பெண்ணின் வீரம்

வீரபுரியை வீரசிம்மன் என்ற மாமன்னன் ஆண்டு வந்தான். அவன் ஆண்டுக்கு ஒருமுறை தன் சிற்றரசர்களைத் தன் பிறந்த நாளன்று கூட்டுவான். அவர்களும் வந்து அவனுக்குக் காணிக்கை செலுத்தி மரியாதையுடன் வணங்குவார்கள். அச்சமயத்தில் ஒவ்வொரு சிற்றரசனும் தன் நாட்டின் சிறப்பைக் கூறுவது வழக்கம்.

வழக்கம் போல ஒரு ஆண்டில் வீரசிம்மன் தன் பிறந்த நாளைக் கொண்டாட சிற்றரசர்களும் வந்து காணிக்கை செலுத்தினார்கள். அச்சமயம் சிற்றரசர்கள் தம் நாடுகளின் சிறப்பைக் கூறலாயினர். ஒருவன் தன் நாடு கைவினைப் பொருள்களுக்குப் பெயர் போனது என்றான். மற்றொரு சிற்றரசன் தன் நாடு உயர்தர மாம்பழத்திற்குப் பெயர் போனது என்றான். இப்படியாக ஒவ்வொரு சிற்றரசனும் தன் நாடு ஏதோ ஒன்றிற்குப் பெயர் போனது என்று கூறினான்.

ஆனால் கமலாபுர சிற்றரசன் கமலநாதன் மட்டும் எதுவும் கூறாதிருக்கவே, அதை கவனித்த வீரசிம்மன் "நீ ஏன் எதுவும் கூறாமல் இருக்கிறாய்?" என்று கேட்டான். கமலநாதனும் "நான் என் நாட்டின் சிறப்பைக் கூறப் போனால் என் மனைவியைப் பற்றித்தான் கூற வேண்டும். அது சரியல்ல என்றே பேசாமல் இருக்கிறேன்" என்றான்.

அது கேட்டு வீரசிம்மன் "ஓஹோ! உன் மனைவி எல்லாக் கலைகளையும் கற்றுச் சிறந்தவளாகி விட்டாளோ? போர்க் கலையில் கூடவா?" என்று கேட்டான்.

கமலநாதனும் "ஆம் அரசே! அவள் வில், வாள் ஆகிய போர்களில் கூட உங்களையும் தோற்க

-சுதா கிருஷ்ணசுவாமி-

டித்து விடுவாள். அவள் முன் நீங்கள் நிற்க முடியாது" என்றான். அதைக் கேட்ட வீரசிம்மன் "என்னை ஒரு பெண்ணைவிடத் தாழ்ந்தவன் என்று கூறி அவமானப்படுத்துகிறாயா? இதற்கு உனக்கு தண்டனை பாதாள சிறைவாசம்தான்" எனக் கூறித் தன் வீரர்களை அழைத்து அவனை இழுத்துப் போய் பாதாள சிறையில் தள்ளும்படிக் கட்டளை இட்டான்.

பல நாட்களாகியும் வீரபுரியிலிருந்து தன் கணவன் திரும்பி வராதது கண்டு கமலநாதனின் மனைவி கவலைப்பட்டாள். அவள் சில ஆட்களை வீரபுரிக்கு அனுப்பி விவரம் அறிந்து வரச் சொன்னாள்.



கமலநாதன் சிறையில் அடைக்கப்பட்ட செய்தி அவனது மனைவி விலாசினிக்குத் தெரிந்தது. அவளுக்குக் கடும் கோபம் வந்தாலும் அதை அடக்கிக் கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பதை யோசித்துத் தீர்மானித்தாள்.

அவள் ஆண் வேடம் பூண்டு குதிரை மீதமர்ந்து வீரபுரிக்குக் கிளம்பினாள். தனக்கு வேண்டிய வில், வாள், கதை முதலியவற்றை எடுத்துக் கொண்டும் தன்னோடு நூறு போர்வீரர்களை அழைத்துக் கொண்டும் வீரபுரிக்குப் போய் கோட்டைக்கு வெளியே கூடாரங்களை அமைத்தாள்.

அதன்பின் அவள் தனியாகவே குதிரை மீதமர்ந்து கோட்டைக்குள் போனாள். அவள் அரண்மனையை அடைந்து குதிரையிலிருந்து இறங்கி தர்பாருக்குள் போய் வீரசிம்மனின் முன் நின்றாள். ஆண் வேடத்தில் மிடுக்காக நடந்து வந்த விலாசினியைக் கண்ட வீரசிம்மன் அதிர்ந்து போனான்.

அவளோ "மன்னனே! நான் மகதச் சக்கரவர்த்தியின் தூதன். அவர் உங்களிடமிருந்து பத்து லட்ச வராகன்களைக் கப்பமாக வசூலித்துக் கொண்டு வரும்படி எனக்குக் கட்டளை இட்டு அனுப்பி இருக்கிறார். நீங்கள் கப்பம் செலுத்த மறுத்தால் போருக்கும் தயாராகவே வந்திருக்கிறேன். உங்கள் கோட்டையைச்



மகளை எனக்கு இப்போதே மணம் செய்து வைக்க வேண்டும்" என்றாள். வீரசிம்மனும் "இதற்கும் ஒரு நாள் அவகாசம் வேண்டும். என் மகளிடம் கூறி அவள் சம்மதம் பெறவேண்டும்" என்றான்.

விலாசினி "சரி. நீங்கள் நாளைக்கு உங்கள் மகளை எனக்கு மணம் செய்து வைக்க வேண்டும். அதற்கு அடுத்த இரண்டு நாட்களுள் எங்கள் சக்கரவர்த்தி கேட்ட கப்பத் தொகையைக் கொடுக்க வேண்டும். இந்த இரண்டில் எது ஒன்று நடக்காவிட்டாலும் போரைத் துவக்குவேன். இது நினைவில் இருக்கட்டும்" என்று கூறிப் போனாள்.

வீரசிம்மனுக்கு அது திடீரென விழுந்த இடிபோலாயிற்று. பணத்திற்கு எங்கே போவது? பெரும் படையை எப்படி எதிர்ப்பது? அவன் எதுவும் தோன்றாமல் குழம்பிப் போனான்.

சுற்றி எங்கள் நாற்பதாயிரம் வீரர்கள் இருக்கிறார்கள். கப்பமா அல்லது போரா? என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

வீரசிம்மன் திகைத்துப் போனான். அவ்வளவு பெரிய தொகை அவனிடம் இல்லை, நாற்பதாயிரம் மகத வீரர்களை எதிர்க்கும் அளவிற்கு அவனிடம் படையும் இல்லை. அதனால் அவன் "இது பற்றி யோசிக்க எனக்கு மூன்று நாட்கள் வேண்டும். இப்போதே பதில் சொல்ல முடியாத நிலையில் இருக்கிறேன்" என்றான்.

அதற்கு விலாசினியும் "சரி. உங்களுக்கு மூன்று நாட்கள் அவகாசம் அளிக்கிறேன். ஆனால் உங்கள்

வீரசிம்மன் தன் மகளிடம் மகத தூதன் கூறியதைச் சொன்னான். அரச குமாரியும் "அந்தத் தூதனைப் பார்த்தால் ஒரு பெண்ணிற்கு ஆண் வேடம் போட்டது போல உள்ளது. அவனது நடையும் ஒரு பெண் நடப்பது போல உள்ளது. அவன் உண்மையில் ஆணல்ல. பெண்ணே என்று நினைக்கிறேன்" என்றாள்.

அதைக் கேட்ட வீரசிம்மன் "நீ கூறுவது கூட உண்மையாக இருக்கலாம். அப்படியானால் ஒரு பெண்

ஏன் ஆண் வேடத்தில் சக்கரவர்த்தி யின் தூதனாக வர வேண்டும்? இதைக் கண்டுபிடிக்க நான் அவனைப் பரீட்சித்துப் பார்க்கிறேன்" என்று கூறி அன்று மாலையே அத் தூதனை அரண்மனைக்கு வர வழைத்து அவனோடு சதுரங்கம் விளையாடினான். அதில் தோல்வி வீரசிம்மனுக்கே. அதன் பின் வீரசிம் மன் அவனை அழைத்துக் கொண்டு பூங்காவிற்குச் சென்றான்.

அப்போது விலாசினியே "இப் போது ஒரு போட்டி. இங்கு இந்த வாளை நட்டு சற்று தூரத்தில் ஒரு வளையத்தைக் கட்டுகிறேன். அதற்குப் பத்தடி தூரத்தில் நின்று அம்பை வளையத்தின் வழியாக வாளின் முனையில் பட எய்து அம்பு இரு சம பாகங்களாகப் பிளந்து போகும்படிச் செய்ய வேண் டும்" என்றாள்.

வீரசிம்மன் ஒவ்வொன்றாக மூன்று அம்புகளை எய்தும் விலாசினி கூறியபடி செய்ய முடியவில்லை. விலாசினியோ ஒரு அம்பை எய்து வளையத்தின் வழியே செலுத்தி வாள் முனையில் படச் செய்து அதை இரு சமபாகங்களாக ஆக்கிக் காட்டி னாள்.

இதைக் கண்ட வீரசிம்மன் திகைத் துப் போனான். அவன் அன்றிரவு தன் மகளிடம் "அந்த தூதன் ஆணழ கன்தான். மாபெரும் வீரன்: நீ அவனை மணந்தாலே நாட்டைத் தக்க வைத்துக் கொள்ள முடியும்" என்றான்.



மறுநாள் விலாசினி "உங்கள் மகளைத் திருமணம் செய்து வைக் கிறீர்களா?" எனக் கேட்கவே வீரசிம் மனும் "அதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறேன்" என் றான். விலாசினியும் "அப்படியா னால் இரண்டு நாட்களுக்குள் கப்பம் செலுத்துவது உறுதிதானே. அதற் குள் ஒரு சிறு போட்டி. என்னோடு வாட்போரும் கதாயுத்தமும் புரிய யாராவது இந்நாட்டில் இருக்கிறார் களா?" என்று கூறி கீழே கிடந்த கதையைக் காலால் உதைத்து உயரக் கிளப்பி அதைப் பிடித்து நிறுத்தி னாள்.

அதுகண்டு வீரசிம்மன் நாக் குளறியவாறே "மாவீரரே! தங்களை எதிர்க்க யாருமே இல்லையே" எனவே, விலாசினியும் "உங்கள் நாட்டில் ஒரு வீரன் கூட என்னை எதிர்க்க இல்லையா? நாட்டில் யாரும் இல்லாது போனாலும் உங்கள் சிறையில் அடைபட்டிருக்கும் அயல் நாட்டு வீரர்களில் யாராவது ஒரு மாவீரன் இல்லையா?" என்று கேட் டாள்.

அப்போது வீரசிம்மன் "ஆம். ஒருவன் இருக்கிறான்" என்று கூறி கமலநாதனைச் சிறையிலிருந்து அழைத்து வரச் செய்தான். கமல நாதனைக் கண்டதும் விலாசினி தன் ஆயுதங்களை அவன் காலடியில் வைத்துத் தன் கவசத்தையும் கழற்றி விட்டு அவனை வணங்கினாள்.

அதுகண்டு வீரசிம்மன் ஆச்சரியப் படவே கமலநாதனும் "இவள் தான் என் மனைவி விலாசினி. இவளைப் பற்றி நான் கூறியதெல்லாம் உண்மை என்று இப்போதாவது தெரிந்து கொண்டிருப்பீர்கள்" என்றான்.

வீரசிம்மனும் "ஆமாம்" எனக் கூறி விலாசினியைப் பாராட்டிய தோடு கமலநாதனை விடுதலை செய்து அவர்கள் இருவரையும் சில நாட்கள் தன் விருந்தினர்களாக வைத் துக் கொண்டிருந்து விட்டு மரியாதை யுடன் அவர்களது நாட்டிற்கு அனுப்பி வைத்தான்.



# இயற்கை விநோதங்கள்




## குற்றவாளிகளைப் பிடிக்கும் நாய்கள்

குற்றவாளிகளைக் கண்டுபிடிக்க போலீசார் நாய்களைக் கொண்டு வந்தார்கள் என்று நாம் செய்திகளைப் படிக்கிறோம். ப்ளட் ஹௌண்ட் எனப்படும் ஒருவகை நாய்கள் மிகவும் அறிவுள்ளவை. இவை மோப்பம் பிடிப்பதில் வல்லவை அதனால் குற்றம் நடந்த இடத்தில் இருந்து குற்றவாளிகளின் வாசனையை இவை முகர்ந்து அவர்கள் போன வழியில் செல்லும். ப்ளட் ஹௌண்டில் பாக்ஸ் ஹௌண்ட் கெசஞ்சி, பிகில் பென்னெட் என்று பலவகைகள் உண்டு. டாஷ் ஹௌண்ட் என்ற வகை நாய்களைப் பழக்குவது எளிது எனப் போலீசார் கருதுகிறார்கள்.



## திமிங்கில வேட்டை

அண்மையில் 'க்ரீன் பீஸ்' என்ற கப்பலிலிருந்தவர்கள் திமிங்கில வேட்டையாடி ஒரு திமிங்கிலத்தை வேறொரு கப்பலிலிருந்து விடுவித்துக் கடலில் விட்டதாகச் செய்திகள் பிரசுரிக்கப்பட்டன. திமிங்கிலங்களை ஏன் வேட்டையாடுகிறார்களென்றால் அதன் தோல் கொழுப்பு முதலியவற்றிற்காகத்தான். இவை குளிர் பிரதேசங்களில் அவற்றிற்குப் போர்வை போல உள்ளன. இவற்றின் கொழுப்பு பெயிண்ட் வார்னிஷ் போன்றவை தயாரிக்கப் பயன்படுகிறது. ஜப்பான் போன்ற நாடுகளில் திமிங்கில மாமிசம் உண்கிறார்கள்.




## தாமரை இலை மீது நடக்கும் பட்சி

ஜாகானா என்ற ஒருவகைப் பறவை மனிதர்களைக் கண்டதும் நீரிலுள்ள தாமரை இலைகளின் மீது வேகமாக ஓடி விடுகிறது. பார்ப்பதற்கு இது நீரின் மேல் நடப்பது போலிருக்கும். அவற்றின் நீண்ட கால் விரல்கள் நகங்கள் உடல் நிறை ஆகியவை இந்த இலைகளின் மேல் நடப்பதற்கு ஏற்ப அமைந்துள்ளன. அதனால் இலைகள் நீரில் அமுங்காது. இப்பறவைகள் தாமரை இலைகள் மீது தம் கூடுகளையும் கட்டுகின்றன.

# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 ஜனவரி மாத இதழில் வெளியிடப்படும்



S.G. Seshagiri



S.G. Seshagiri

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ நவம்பர் 10-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600 026**

---

## செப்டம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **சுமை தாங்கியாய் வாழ்க்கைப் பயணம்**

இரண்டாவது போட்டோ : **சுமை தூக்கியே வாழ்க்கைப் பயணம்**

பரிசு பெற்றவர் : **பொன் முத்துக்குமார், பணகுடி.**

## அம்புலிமாமா

**இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 60-00**

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி :

**டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை - 600 026.**

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

---

The stories, articles and designs contained herein are exclusive property of the Publishers and copying or adapting them in any manner will be dealt with according to law.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 117.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 264.00

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ.123.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 264.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி
சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்




புதிய குஸ்தி சேம்பியன் சூப்பர் எம்

பம்பாய், அக்டோபர் 1994 எங்கள் விசேஷ நிருபர்: "ஹா! கடைசியில் என் சூப்பர் சக்தி அவனுக்கு புரிஞ்சிடுச்சு" என்று கர்ஜனை செய்தவாறு சொன்னான் சூப்பர் எம். சீறும் கல்தாரனைக் கீழே தள்ளி கடைசியாக எண்ணும் வரை அழுத்திப்பிடித்து புதிய குஸ்தி சேம்பியன் ஆனான் சூப்பர் எம். வெற்றியடைந்த ஆனந்தத்தில் ஒரு சூப்பர் மில்க் பிஸ்கட் பேக்கட்டை எடுத்து அதிலுள்ள பிஸ்கட்டை எடுத்து சாப்பிட்டான் சூப்பர் எம். பிறகு கண்ணை சிமிட்டியவாறு தன் ரசிகர்களிடம் சொன்னான் "பாவம், அவனுக்கு சூப்பர் மில்க் பிஸ்கட்டின் சூப்பர் சக்தி, சூப்பர் சுவையைப்பத்தி ஒண்ணும் தெரியாது. தெரிந்திருந்தால்......" தொடர்ந்து சூப்பர் எம் சொன்னான் "அடுத்தடவை நன்னா தயார் பண்ணிக்க. அப்புறம் சண்டை போட வா... **சேலஞ்சுடன்**".




சூப்பர் சக்தி. சூப்பர் சுவை. சூப்பர் மில்க் பிஸ்கட்




பாலே

everest/94/PP/139-tm